*Tirāviṭa nāṭu*

*Malar 12, ital 11*

*September 13, 1953*

Record no. 1005

ான் நெ 15 விலை 2 அணு REGD. NO 4642

# திராவிடநாடு

மலர் 12 | 13—9—53 | இதழ் 11

# ஆச்சாரியார்—காமராஜர் அரசியல் போர்

## அக்டோபர் "ஸ்டண்ட்" ஆரம்பம்

### பண்டித நேருவின் தலையீடு

### தற்காலிக சாந்தி

[ அடிகள் ]

"ஒன்றும் தெரியாதவர்கள்—நான் யார்? அவர் யார்? என்பதையே புரியாதவர்கள்—எங்களுக்குள் ஏதாவது . பிளவு — பிணக்கு இருந்தால், அதை நாங்களே நேரில் பேசித் தீர்த்துக்கொள்வோம் என்பதைக்கூட அறியாதவர்கள்—நான் யார் என்பது அவருக்குத் தெரியும், அவர் யார் என்பதும் எனக்குத் தெரியும் — ஆனால், எங்கள் இருவரையும் சரியானபடி புரிந்துகொள்ளாதவர்கள், எங்களுக்கிடையே ஏதோ தகராறு இருப்பதாக எண்ணிக்கொண்டு தவறான பிரசாரத்தில் இறங்கியிருக்கிறார்கள்—இந்தத் தவறான பிரசாரம், அவர்கள் கொண்ட தப்பர்த்தத்தில் ஏற்பட்ட குற்றமென்பதை அவர்கள் மிகமிக விரைவில் உணரப் போகிறார்கள் — அந்த அரிய வாய்ப்பினை எனது அன்பரும், நண்பரும், உறவினருமான டி. வி. சுந்தரமய்யங்காரவர்கள் உண்டாக்கித் தரப்போகிறார் — அந்த அரிய வாய்ப்பை நானும் அவரும் பயன்படுத்தி, எங்கள் உண்மை வடிவத்தை உலகறியச் செய்யப்போகிறோம்" என்பதாக ஆச்சாரியார் ஒரு கனவு கண்டதாகவும், கனவு கண்ட மறுநாளே மதுரையில் இருந்து ஒரு அழைப்புக் கடிதம் வந்ததாகவும், அந்த அழைப்புக் கடிதத்துடன் ஒரு இணைப்புக் கடிதமும் இருந்ததாகவும், அதில், 'ஆச்சாரியாரின் ஆரம்பக்கல்வித் திட்டத்துக்கு அனுபவ பூர்வமாக ஆதரவு இருப்பதை நேரில் நிரூபித்துக்காட்டுவதாக எழுதியிருந்ததாகவும் என்னிடம் ஒரு நண்பர் கூறினார். முதலில் என்னால் இதை நம்பமுடியவில்லை. என்றபோதிலும், மேற்படி விஷயத்தைக் கூறிய நண்பர் நம்முடைய எதிர்க் கூடாரத்தில் இருப்பவராதலால், அவர் கூறியதில் உண்மை இல்லாமல் போகாதென்ற நம்பிக்கையுடன் 31—8—53 எப்போதுவரும் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். மதுரைக்குப் போய், நேரில்பார்த்து, மேற்படி இரண்டு உண்மைகளையும் அனுபவித்து ஆனந்திக்க வேண்டுமென்ற அவாக்கூட என்னைப் பெரிதும் அலைக்கழித்தது. ஆனால், அதற்குரிய வாய்ப்பும் வசதியும் இல்லாத காரணத்தால், அவற்றைப் பத்திரிகைகளில் பார்த்தாவது பரவசமடையலாம் என்று காத்துக்கிடந்தேன். நான் எதிர்பார்த்தபடி பத்திரிகைகளில், அந்த இரு உண்மைகளும், எனது நண்பர் கூறியபடி ஒளிவு மறைவின்றி வெளிவந்திருந்தன. அந்த நண்பரைக்கண்டு நன்றி தெரிவிக்கலாம் என்றாலோ, அவர் தான் எதிர்க் கூடாரத்தில் இருப்பவராயிற்றே! எங்கே அடிக்கடி நம்முடைய கண்ணில் படப்போகிறார்? இப்படிப்பட்ட சம்பவங்கள் நடைபெறும்போதன்றி, மற்றச் சமயங்களில்தான் அவர் நம்மிடம் வருவதில்லையே! சரி, போகட்டும்! இன்னும் எத்தனையோ 'ஸ்டண்டுகள்" எதிர்க்கூடாரத்தில் நடக்க இருக்கின்றனவே! அப்போதெல்லாம் அவர் நம்மிடம் வராமலா இருப்பார்? வருகிற அக்டோபருக்குப் பிறகு அடுக்கடுக்காக அநேக "ஸ்டண்டுகள்" நடக்க இருப்பதாக ஒரு வதந்தி உலவுகிறது! அந்தச் சமயத்தில் அந்த நண்பரைச் சந்தித்து எனது நன்றியறிதலைமொத்தமாகத் தெரிவித்துக் கொள்கிறேன். இது கிடக்கட்டும்! பெரிய விஷயத்தைப்பற்றி எழுதிக்கொண்டிருக்கும் சமயத்தில் ஏன் இந்த நன்றியறிவிப்பைப் பிரமாதப்படுத்துகிறாய்என்று எங்கே கேட்டுவிடுவீர்களோ என்ற அச்சம் எனக்கு ஏற்படுகிறது. எனவே, விஷயத்தை ஆரம்பிக்கிறேன்

*

"மழை வரும்" என்பதற்கு வேண்டிய அறிகுறிகள், சில சமயங்

# ஆருடம் கணித்து ஆனந்தமடைந்தவர்க...

களில், முன் கூட்டியே தெரிவதுண்டு. அதாவது, இன்று அல்லது நாளேயோ, இந்தவாரம் அல்லது அடுத்த வாரத்திலோ மழைபெய்யப் போகிறதென்பதற்குத் தேவையான அறிகுறிகள்—மேகங்கள் அல்லது குளிர்காற்றுப்போன்ற முன்னறிவிப்புக்கள் தோன்றுவதுண்டு. ஆனல், சில சமயங்களில் எந்தவிதமான அறிகுறியோ முன்னறிவிப்போ இல்லாமல் திடீரென்று மழைபெய்வதுமுண்டு. இப்படிப்பட்ட எதிர்பாராமழையால் சிலருக்கு நன்மையும் சிலருக்குத் தீமையும் ஏற்படுவதுமுண்டு.

இந்த உதாரணம் அரசியலுக்கும் பொருந்தும். அரசியலில் ஏற்படும் சில மாறுதல்கள் காலமழையைப் போல் முன்கூட்டியே தெரியக்கூடியதாக அமைந்துவிடுவதுண்டு. சில மாறுதல்கள், எதிர்பாரா மழையைப் போல் திடீரென்று ஏற்படுவதுமுண்டு.

ஷேக் அப்பதுல்லாவுக்கு ஏற்பட்ட அரசியல் மாறுதல் திடீர் மழையைப் போன்றது.

ஆச்சாரியாருக்கு ஏற்பட இருக்கும்—ஏற்பட்டுள்ள மாறுதலைக் கால மழைக்கு ஒப்பிடலாம். அதாவது முன்கூட்டியே தெரிந்த ஒன்றாகும்.

ஓமந்தூர் இராமசாமி அவர்களைப் போல், ஒழுங்கான அரசியல் பாதையை அறிந்து, அவ்வழியில் சென்றவர்களுக்கே எதிர்பாராத மாறுதல்களை அரசியல் உலகம் திடீரென்று உண்டாக்கி விடுகிறதென்றால், ஆச்சாரியாரைப் போல் அழுக்கு நிரம்பிய கொல்லைப்புறமாகவாவது, யாராவது வழி உண்டாக்கிக் கொடுக்க மாட்டார்களா என்று காத்திருந்து, அவ்வழி வந்தவர்களுக்கு எந்த நிமிஷத்திலும் அரசியல் மாறுதல் ஏற்படுமென்பது எல்லோருக்குமே தெரிந்த ஒன்றுதான்; என்ற போதிலும், ஆச்சாரியாரைப் பொறுத்தவரையில், எந்த மாறுதலும் ஏற்படாதென்று ஆருடம் கணித்து ஆனந்த மடைந்தவர்கள் பலருண்டு. இன்றும் அதே நம்பிக்கையோடுள்ளவர்கள் சிலர் இருக்கிறார்கள். ஆனல், இப்படிப்பட்டவர்கள் அரசியல் தெரியாதவர்கள்—அரசியல் துருப்புச்சீட்டு எந்தச் சமயத்தில், யார் கைக்கு மாறும் என்பதறியாத அப்பாவிகள்—ஆச்சாரியாருக்கு ஆபத்து. அதாவது ஆச்சாரியாரின் அரசியல் வாழ்வுக்கு ஆட்டம் கொடுத்து விட்டதென்று அறிந்ததும், அலறித் துடித்து அலகாபாத்தாரிடம் அடிபணிந்து கேட்டாவது அவரைக் காப்பாற்றி விடலாமென்று காவடி தூக்குபவர்கள் — இப்படிப் பட்ட சில்லரைகளைத் தவிர, சிறிதளவு அரசியல் அநுபவம் உள்ளவர்கள் கூட, ஆச்சாரியாரின் அரசியல் வாழ்வு எந்த நிமிஷத்திலும் ஆட்டம் கொடுக்கக் கூடியதென்பதை அறிவர்.

ஆச்சாரியார் ஆட்சிப் பீடம் ஏறிய நாளிலிருந்தே, அவர், அவருடைய சகாக்களாலேயே தூக்கி எறியப்படுவர் என்பதை நாம் கூறி வருகிறோம். ஆந்திரப்பிரிவினை உறுதிப்படுத்தப் படுவதற்கு முன்பிருந்தே நாம் இந்த உண்மையைக் கூறி வந்திருக்கிறோம்.

சென்ற தேர்தலில் வெற்றிபெற்ற காங்கிரஸ்காரர்களில் ஒருவர்கூட ஆட்சிப்பொறுப்பை ஏற்கும் தகுதியற்றவர்களாய் இருந்த காரணத்தால், ஆச்சாரியாரை, வழிதவறியாவது அழைத்து வந்து ஆட்சிப் பீடத்தில் அமரவைத்துக் காங்கிரசின் மானத்தைக் காப்பாற்ற முயன்ற நாளிலிருந்தே நாம் இந்த உண்மையைக் கூறிவருகிறோம்.

ஆனல், தோழர் காமராஜர் போன்ற ஒரு சிலருக்கு மட்டும் ஆச்சாரியாரின் அரசியல பிரவேசம் சிறிதும் பிடிக்காமல் இருந்தது, என்ற போதிலும், காலம் வந்து, காலைவாரிவிடும் வரையில், வேறு வழியின்றி வாய்மூடிக்கிடக்கவேண்டிய நிர்ப்பந்தத்தில் இருந்தார்கள். அப்படி இருந்த போதிலும், சமயம் வாய்க்கும் போதெல்லாம், நெருப்பிருப்பதைப் புகை அறிவிப்பது போல், ஆச்சாரியாரின் ஆட்சி தங்களுக்குப் பிடிக்கவில்லை என்பதை அவ்வப்போது காட்டத் தவறியதில்லை. கடந்த ஏப்ரல் மாதத்தில் தென்ஜில்லாக்களில் சுற்றுப் பிரயாணம் செய்த தோழர் காமராஜர், அப்பகுதிகளிலுள்ள பஞ்ச நிலைமையைச் சுட்டிக்காட்டி ஆச்சாரி

யாருக்கு எச்சாரிக்கை செய்...
முறையில் பேசியதை வாச...
இதற்குள் மறந்திருக்கமாட்டா...
என்றே நம்புகிறேன்.

"ஆச்சாரியாரின் ஆட்சியிலே...
பஞ்சத்தால் தவிக்கிறது, சர்க்...
சரியான நிவாரணம் அளி...
வில்லை என்று காமராஜர்...
போதே பேசியுள்ளார். சர்...
சார்பில் பேச வேண்டியவர்...
ரென்று மக்கள் சார்பில்...
யதற்குக் காரணம், ஆச்சா...
ஆட்சி புரிகிறார் என்பது தா...

ஆனல், காமராஜருக்கும் ஆ...
யாருக்கும் இடையே 'லடாய்'...
பமாகி விட்டது—இனி ஆச்...
யார் ஆட்சிப் பீடத்தில் அ...
நாட்கள் அமர்ந்திருக்க முடி...
என்று நாம் கூறும் போது...
நண்பர் காமராஜர் நம்மீது சீற்...
தவறுவதில்லை.

"காங்கிரசின் விரோதி...
காங்கிரஸ்காரர்களுக்கிடை...
ஒற்றுமையைக் குலைத்து, அ...
அழிவுதேட விரும்புகிறா...
எனக்கும் ராஜாஜிக்குமிடை...
அபிப்பிராய பேதமிருந்...
அதைக் கமிட்டிக் கூட்டத்...
அல்லது நேரடியாக ரா...
யுடன் பேசியோ தீர்...
கொள்ளமுடியும். எனக்...
சென்னை முதல் மந்திரி...
இராஜகோபாலாச்சாரியாரு...
இடையே எவ்வித அபிப்...
பேதமும் கிடையாது."
என்று 9—6—53ல் அ...
கோட்டையில் நடைபெற்ற...
கிரஸ் மாநாடொன்றுக்குத் த...
வகித்துப் பேசிய காமராஜர்...
பிட்டார். இவ்விதம் கூறிவி...
தாம் அப்பழுக்கற்றவர் —...
யாரின் ஆட்சியே நிலைத்...
வேண்டுமென்று நினைப்ப...
தானும் ஒருவர் என்று நாம்...
வேண்டுமென்பது காமரா...
நோக்கம்—ஆசை. அதனை வலி...
தும் முறையிலேயே, அந்த...
டில் மேலும் ஒரு 'விளக்க...
துள்ளார்.

"நம்முடைய பிரச்...
யெல்லாம் தீர்ப்பதற்கு ரா...
குத் திறமை இருக்கிற...
நாம் எல்லோரும் நினைக்கி...



# மறந்ததை நினைத்தலே மரபு

...ஆச்சாரியாரின் ஆட்சித் திற
...குக் காமராஜர் அளிக்கும்
...பிகேட்டாகும். ஆனல், இந்தச்
...பிகேட்டிலே ஒரு புதுமை
...ப்படுகிறது.

..."நம்முடைய பிரச்னைகளைத்
...ர்ப்பதற்கு ராஜாஜிக்குத்திறமை
...ருக்கிறது."
... இந்த அளவோடு நிறுத்தா

..."என்று நாம் எல்லோரும்
...னைக்கிறோம்"
... வாசகம் ஏன் அந்தச் சர்டிபி
...டில் சேர்க்கப்பட்டது? அதி

..."என்று நினைக்கிறோம்"
... கூறாமல்,

"என்று நாம் எல்லோரும்
...நினைக்கிறோம்."
... ஏன் கூறவேண்டும்?

...நினைக்கிறோம்
...எல்லோரும்.

... இரண்டு சொற்களையும் காம
... அந்தச் சர்டிபிகேட்டில்புகுத்
...தக் காங்கிரஸ் அன்பர்கள்
...த்துப் பார்க்க வேண்டு
...ம். ஆச்சாரியாரின் திறமையை
...ட்டுப் பார்க்க இந்த அகி
...லேயே ஆள் கிடையாதுஎன்று
...வேண்டிய கட்டாயத்தில்
...கும் ஒருவர், ஆச்சாரியாரின்
...மையைப்பற்றிப் பேசும்போது,
...க்குத் திறமை இருப்பதாக
...லாரும் நினைக்கிறார்கள் என்று
...பேசவேண்டும்?

...னைக்கிறோம்—இந்தச் சொல்
...பொருள் என்ன? நாம் நினைக்
...ம் — காங்கிரஸ்காரர்களாகிய
...நினைக்கிறோம் — மற்றவர்கள்
...க்கவில்லை — எதிர்க்கட்சிக்காரர்
...நினைக்கவில்லை—ஆட்சி புரியும்
...மை ஆச்சாரியாருக்கு இல்லை
... எதிர்க்கட்சிக்காரர்கள் திட்ட
... கூறுகிறார்கள்—ஆனல், நாம்
...ருக்குத் திறமை இருப்பதாக
...க்கிறோம் — நினைக்கவேண்டிய
...ாயத்தில் விடப்பட்டிருக்
...ம்—ஒருவர் இருவரல்ல—காங்
...ல் இருக்கும் எல்லோருமே
...ாரியாரின் திறமையைப்
...ாட்ட வேண்டியவர்களாக
...க்கிறோம் — இதுதானே

அந்த இரண்டு சொற்களின் விளக்கமாகும். ஆச்சாரியாரின் திறமைக்கு ஆட்சேபனையாராலும் கூறமுடியாது என்று, அழுத்தம் திருத்தமாகப் பேசவேண்டிய ஒருவர், அவருக்குத் திறமையிருப்பதாக நினைத்தது ஏன்? மற்றவர்களையும் சேர்த்து, நாம் எல்லோரும் நினைக்கிறோம் என்று கூறியது ஏன்?

*

நினைத்தல் — மறத்தல் என்ற இரண்டும் தமிழ்ச் சொற்கள். மறந்த ஒன்றைத் திரும்பப் பெறுவ ப் பயன்படுத்தப்படும் சொல் தான் நினைத்தல்.

மறந்திருப்பாய், நினைத்துப்பார்.

*

காலம் பலவாகக் கழிந்துவிட்ட காரணத்தால் மறந்துவிட்டேன், நினைவில் இல்லை.

*

சாதாரண விஷயம், எனவே நினைவில் இல்லை, மறந்துவிட்டேன்.

*

மறந்த ஒன்றை இப்போதுதான் நினைத்துக்கொண்டேன்.

*

எனக்கு மறதி அதிகம்.

*

அவருக்கு ஞாபகசக்தி அதிகம்.

*

மறந்ததை நினை — நினைந்ததை மறவாதே.

ஆச்சாரியாருக்குத் திறமை இருக்கிறதென்று, காங்கிரஸ்காரர்கள் எல்லோருமே நினைக்கிறார்களாம்!

ஏன்மறந்தார்கள்? ஆச்சாரியாரின் திறமை மறக்கக்கூடிய விதத்திலா அமைந்திருக்கிறது. அதிலும் அவருடைய திறமை காங்கிரஸ்காரர்களாலேயே மறக்கக் கூடியதா?

சேலத்தில் வக்கீல் வேலைக்குப் படித்துக் கொண்டிருந்தபோதே ஆரம்பக்கல்வித் திட்டத்துக்கு அடிகோலும் அளவுக்கு அருமையாக அமைந்திருந்த 'திறமை', சாதாரணமாக மறக்கக் கூடியதா?

1938—ல் சென்னையில் அமைச்சராய் இருக்கத் தொடங்கியதிலிருந்து கவர்னர் ஜெனரலாய் இருந்த காலம் வரையிலும், அதற்கு முன்பும் ஆச்சாரியாரை ஒரு திறமைசாலி என்று பாராட்டியவர்கள், ஏன் இப்பொழுது அவருடைய திறமையை மறந்தார்கள்? ஏதோ சிறிது காலம் அரசியல் ஓய்வு பெற்று இருந்ததாலேயே அவருடைய திறமை மறக்கப்பட்டுவிடுமா? அவருடைய திறமை அவரைக் கொல்லைப்புறவழியாகவாவது கொண்டு வந்து ஆட்சிப்பீடத்தில் அமர்த்த வேண்டிய அளவுக்கு விசாலமாக இருந்ததென்று கூறப்படும்போது, அப்படிப்பட்ட அற்புதமான திறமையை எப்படி இவர்கள் மறந்தார்கள்?

மறந்த ஒன்றைத்தானே நினைப்பது வழக்கம்.

## அன்பழைப்பு

—✲—

அன்புடையீர்!

வணக்கம்; 14—9—53 திங்கட்கிழமை காலை 9-30 மணி அளவில், தஞ்சாவூர் கோண்டிராஜாபாளையம் தண்ணீர்ப்பந்தல் கட்டிடத்தில், நடக்க இருக்கும் எங்கள் வாழ்க்கை ஒப்பந்தத்துக்கு தாங்கள் வந்து சிறப்பிக்க வேண்டுகிறோம்.

தஞ்சை,
9—9—53

அன்புள்ள,
வி. சரசுவதி—டி. கே. சீனிவாசன்

# ஆட்சித்திறன் ஆச்சாரியாருக்கில்லை

ஏன் மறந்தார்கள்? ஏன் நினைக்கிறார்கள்?

*

உண்மையென்னவென்றால், நண்பர் காமராஜரும் ஏனைய காங்கிரஸ்காரர்களும் ஆச்சாரியாரின் திறமையை மறக்கவும் இல்லை — நினைக்கவும் இல்லை.

மதவாதிகள் இறந்து பிறப்பது போல், இவர்களும் மறந்து நினைப்பவர்களா? அதிலும் ஆச்சாரியாரைப் போன்ற ஒரு அரசியல் தலைவனுடைய திறமையையா இவர்களால் மறக்கமுடியும்? அதிலும் நினைப்பு மறப்பற்ற ஒரு கடவுளை வழிப்படும் இவர்களா ஆச்சாரியாரின் திறமையை மறக்கக்கூடியவர்கள்?

இல்லை—இவர்கள் மறக்கவில்லை—எனவேதான் நினைக்கிறார்கள்.

என்ன இது ஒரு புது ஆராய்ச்சியாக இருக்கிறதே என்று நினைக்கிறீர்களா?

மறப்பவர்கள் தான் நினைப்பார்கள்—அது தான் மரபு என்று வியாக்யானம் செய்துவிட்டு, இப்போது மறக்காதவர்கள் நினைக்கிறார்கள் என்று புது வியாக்யானம் செய்கிறேனே! ஏன்—எப்படி என்று கேட்கத் தோன்றும்.

இவர்கள், ஆச்சாரியாருக்குத் திறமை இருக்கிறதென்று நினைப்பவர்கள்—நினைக்கும்படியான சூழ்நிலையில் கொண்டுவந்து நிறுத்தப்பட்டிருப்பவர்கள்—அதாவது, நாட்டின் நலிவைப் போக்க ஆச்சாரியார் திறமையான எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை என்ற குற்றச்சாட்டை ஆச்சாரியார்மீது எதிர்க்கட்சிக்காரர்கள் சுமத்துவதைப் பார்க்கப் பார்க்க, இவர்களுக்கு என்னவோபோல் இருக்கிறது! "நாம் தான் இந்த ஆசாமிக்கு ஆளும் திறமை கிடையாது — வெளியே தள்ளிவிட்டு வேறொருவரை ஆட்சிப்பீடத்தில் அமர்த்தவேண்டுமென்ற அடிப்படை வேலையில் இறங்கி இருக்கிறோமே! இந்த நிலையில் எதெதுகளோ ஆச்சாரியாருக்குத் திறமை இல்லை — நல்ல ஆட்சிக்கு உரிய இலட்சணங்கள் எவையோ அவை ஆச்சாரியார் ஆட்சியிலே காணக் கிடக்கிறதா என்று பகிரங்கமாகவே கூறுவதைப் பார்க்கும்போதுதான், காங்கிரஸ் கட்சியின் மானத்தைக் காப்பாற்றித் தொலைப்பதற்காகவாவது அவரை ஒரு திறமைசாலி என்று நாலுபேர் அறியச் சொல்லி வைக்கவேண்டிய நிலைமையில் இருக்கின்ற, ஆச்சாரியாரின் உடன்பிறந்த விரோதிகள் கூட்டம் — காங்கிரஸ்காரர்களில் ஒரு பகுதியினர் — ஆச்சாரியாரின் ஆட்சியை எதிர்க் கட்சிக்காரர்கள் எதிர்த்தால் அதைக் காணச் சகியாதவர்கள் — ஆச்சாரியாருக்குத்திறமை இருக்கிறதென்று நினைக்கவேண்டியவர்களாகிறார்கள். காரணம்; அவர்கள் சொல்லுவதையே நாமும் சொல்கிறோம் என்பதுதான். அதாவது, ஆச்சாரியாருக்கு ஆளுந்திறமை இல்லை என்று அவர்கள் முடிவு கட்டிய ஒன்றை நாமும் கூறுகிறோமே என்பதைத் தவிர, நம்மீது அவர்கள் பாய்வதற்குவேறு எந்தக்காரணமும் கிடையாது.

*

ஆச்சாரியாரின் அந்தரங்கத்தை அப்படியே பிளந்துகாட்டி, விதை வேறு. சதைவேறு, தோல்வேறாகப் பிரித்துவைத்து, இந்தப் பழம் பார்வைக்கும் நன்றாயில்லை—பசிக்கு உண்ணவும் முடியவில்லை—உண்டால் உயிருக்கே ஆபத்து வந்துவிடும்—எனவே நல்ல பழம்தரும் வேறு மரம் தேவை என்று கூறும் எங்களைப் பாராட்டவேண்டியவர்களே பகைக்கிறார்கள் என்றால், மரம், அவர்கள் தோட்டத்தில் இருப்பதென்பதைத் தவிர இந்தப் பகைமைக்கு வேறுகாரணமே இல்லை. தோட்டம் என்னவோ அவர்களுடையதுதான். மரமும் அவர்களால் வளர்க்கப்பட்டதுதான். ஆனால் அந்த மரத்தில் உண்டாகும் பழம் நம்முடைய தெருவிலும் கொண்டுவந்து விற்கப்படுவதால், அந்தப் பழத்தில் காணப்படும் குணக்கேடுகளை எடுத்துக்கூறி, அதனை யாரும் சாப்பிடக்கூடாதென்று எச்சரிக்கை செய்யவேண்டியவர்களாக இருக்கிறோம். பழம் அவர்கள்தெருவில்மட்டும் விற்கப்பட்டால், நாம் அதைப் பற்றிக் கவலைப்படமாட்டோம்.

நிலம் என்னவோ உரமான தான்—தோட்டம் வைப்பதற் ஏற்றதுதான்—ஆனால் நல்ல முறை யில் ஏற்படுத்தப்பட்ட தோட்ட தில் நல்ல பயன் தரும் மரங்க உண்டாக்கியதோடு நின்றுவிடாம கள்ளியும், முள்ளியும், கத்தாழை யும் கனவேகத்தில் தோட்டம்மு வதையும் கவ்விக் கொள்ளும்ப செய்தால், மாவும், பலாவும், வாழை யும், தென்னையும் பிறவும் என்ன ஆகும்?

ஆரம்பத்தில் அந்தத் தோட்ட அனைவருக்கும் பொது என்றிரு ந்தது. நல்ல மரங்களே பெரு பாலும் வளர்க்கப்பட்டன. தோட் டத்தின் வேலி ஓரத்தில்கூட விஷ செடிகள் நிற்கமுடியாத நிலைமையொ றும் ஒரு காலத்தில் இருந்த பின்னர், படிப்படியாகத் தோட்ட நாட்டிலுள்ள ஒருசிலருக்கே சொ தம் என்ற சுயநலநீர் பாய்ச்சப்ப டது. அதன் காரணமாக பல நல் மரங்கள் வெளியேறவும், நச்சுமர கள் பல, தோட்டத்தின் நடுவி போய் வேரூன்றவுமான நிலை ஸ்திரமாக்கப்பட்டது.

இப்போது, அந்தத் தோட்ட தில் உண்டாகும் பழங்களிற் சி அத்தோட்டத்தைக் கட்டிக் காய் வர்களாலே கூடச் சாப்பிட மு யாத அளவுக்கு அவற்றின் சுவ மாறி விட்டதை அவர்களே கண்டுபிடித்து விட்டார்கள் அப்படிப்பட்ட கெட்டு போன பழங்கள் நம்முடைய தெ வில் வந்து விற்கப்படுவதை நா கண்டிப்பது ஒரு புறமிருக்க, அவ களுடைய தெருவிலேயே அந்த பழங்கள் விற்கப்படக்கூடாது என கண்டிப்பும் எச்சரிக்கையும் எழு பக் காண்கிறோம்.

இந்த நிலைமையில் தோட்டத்தி சொந்தக்காரர்கள் என்று சொல்ல படுபவர்களில் ஒரு சிலர், "தோட டமோ நம்முடையது—அதில் வ ரும் மரங்களோ நம்மால் வைக்க பட்டவை—அந்த மரங்களி இருந்து உண்டாகும் பழங்களை சாப்பிடக் கூடாதென்று நாமே கூறினால், பழங்களை யாருமே வாங

(13-ம் பக்கம் பார்க்க)



புலி வாழும்! பசு சாகும்!!

# இந்தப் பாதை வேண்டாம்!

லையில்லை!—என்ற சிறுகுரலைக் கேட்க முடியவில்லை.

லைகள் செய்ய மனிதர்கள் ம் வேண்டும்!—என்றுதான், போறும் கேள்விப்பட்

! எவ்வளவு திறமையான , அவர்கள். எந்தக் காரியத்தி டாலும், திட்டமிட்டு, கிரமாக்குகிறார்கள். அழகான ான்றைக் கண்டேன்—இயற் க அமைந்த ஏரியல்ல, அது. வயது மாணவர்கள், 1½- காலர், பாடுபட்டு வெட்டிய

லை!' எனும், குரலைக் கேட் முடியவில்லை. அத்தகைய த்தோடு இருக்கிறார்கள்,

லோருக்கும் கல்வி! எல் ருக்கும் வாழ்வு!!

*

யா சென்று திரும்பிய, வி இந்திரா நேரு, இவ் வர்ணித்து எழுதியிருக் 35-ஆண்டுகளுக்குமுன், யும் விபரீதமும் நிறைந்த ரஷ்ய பூமியில், இன்று இன் அரசோச்சுவதாக அறிவிக் சோறு, இல்லை—எனும் கிடையாது; அவ்வளவு, யைக் குவியல்கள்! உடை —எனும் அதிருப்தி, கிடை அவ்வளவு, ஆடைகள் உற் யாகின்றன! வேலையில்லை— வேதனைக் குரல், கிடை அவ்வளவு தூரம் செய்வதற் வேலைகள் இருக்கின்றன. மட்டுமல்ல, நாட்டை வளமாக்க வும் மனித சக்தி தேவைப்படு ; எவ்வளவுபேர், பிறந்தாலும் களுக்கெல்லாம் 'வேலை' தயா வயிருந்துகொண்டிருக்கிறது – , பண்டிதரின் மகள் தோழி ந்திரா, எழுதியிருக்கிறார் — கட்டுரையில். அவருடைய ரையில், உணர்ச்சிப் பெருக் த்தோடுகிறது! உண்மைதானே —மனித குலம், கவலையற்று வாழ்வதைக் காணும், எவருக்கும், உணர்ச்சியும் அன்பும், உள்ளத்தில் நிரப்பத்தான் செய்யும்.

*

தான் கண்டுவந்த பூமியின் வனப்பைப்பற்றி, அம்மையார், வர்ணிக்கிறார் — இதே நேரத்தில், 'பாரத மாதா'வின் நிலை குறித்து, பார்லிமெண்டில், ஒப்பாரிவைத்துள்ளனர், பலர். "நாட்டில் பெருகிவரும் வேலையில்லாத் திண்டாட்டம்பற்றி" —காரசாரமான விவாதம் நடைபெற்றிருக்கிறது. வேலையில்லை! வேலையில்லை!!—அப்பப்ப, இந்தப் பிரச்னை, எவ்வளவு கொடுமையும் தீங்கும் பயப்பதென்பதைப் பலர் அறியவில்லை.

படித்தவன், அலைகிறான்.

கிராமத்தான், கிளம்புகிறான், நகர்நாடி.

ஆண்டுதோறும், இந்தக் கும்பல் அதிகரித்தபடி, இருக்கிறது.

வேலையில்லாததால், வாழ முடியவில்லை — வறுமை மிஞ்சுகிறது— பிச்சைக்காரர்கள் கூட்டம் பெருகுகிறது. நாட்டின் காளான்கள்போல கள்ளனும் கபடனும், விபசாரியும் விபரீதங்களும் உருவாகின்றன.

வாழமுடியாதவனின் இதயங்கள் எரிமலைகளாகி, சமுதாய வாழ்வையே சுட்டுச் சாம்பலாக்குமளவுக்குச் சென்றுவிடுகின்றன. இந்தக் கேட்டினை, பார்லிமெண்டில், பலர் எடுத்துச் சொல்லினராம்!

ஒவ்வோராண்டும், நாட்டில் வேலையில்லாதார் தொகை சுமார் 20-லட்சம் அதிகரிக்கிறதாம்.

கூறியிருக்கிறார், ஒருவர்—இந்தப் புள்ளி விபரம்கூட, சரியல்ல, என்போம், நாம். ஆண்டுதோறும் ஆங்காங்கு, வளர்ந்துவரும் வேலையில்லாதோர் தொகை, கோடிக் கணக்காகும்.

ரஷ்ய மண்ணில், எத்தனைபேர் பிறந்தாலும், அத்தனை பேருக்கும் 'வேலைகள்' காத்துக்கொண்டிருக்கின்றன என்று, கூறப்படுகிறது.

ஆனால், இங்கோ! பிறப்பு அதிகமாக அதிகமாக பிரச்னை வளர்கிறது —தடைசெய்ய மார்க்கம், இல்லை.

நாடு முழுமையும் நஞ்செய் புன்செய் ஏராளம்—நீர்பாய்ச்சி, பயிரிடப்படவேண்டிய கரம்பு நிலங்கள் ஏராளமாகக் கிடக்கின்றன. உலவும் மக்களின் சக்தியையெல்லாம் ஒன்று திரட்டி, நாட்டுக்கான நல்வாழ்வுகளில் பயன்படுத்தினால், பலன் பெறலாம். ஆனால், அந்தக் கூட்டத்தைக் காணும் அரசாங்கமோ, மிரள்கிறது! அலறுகிறது!!

*

ஜாரின் ரஷ்யாவிலே, படியாதோர் தொகை மிக அதிகம்—வேலையில்லாமல் திரிந்தோர் ஏராளம்—வயிற்றுக் கொடுமையால் அலைந்தோர் கும்பலும் வறுமைக்கு ஆளானோரும் நிரம்பிய வேட்டைக்காடாக இருந்தது — தொழில் வளர்ச்சி கிடையாது — இயந்திரசாலைகள் இல்லை — இவ்வளவு பிற்போக்கிலிருந்த பூமிதான், இன்று, இந்திராவின் இதயத்தில், ஆச்சரியம் வளருமளவுக்கு, உயர்ந்திருக்கிறது. அதற்கான காரணம், ரஷ்யத் தலைவர்களின் திறமையும்—மக்களின் ஆர்வமும் — என்று, தெரிவிக்கிறார், இந்திரா. 'ஐந்தாண்டுத் திட்டம்', என்று வகுத்து இன்னின்ன காரியங்கள் இந்த ஐந்து ஆண்டுக்காலத்தில் முடிக்கப்படவேண்டும் என்று சர்க்கார் திட்டம் போட்டால்; சர்க்கார் எதிர்பார்த்ததைவிட அதிகமான காரியங்கள், அந்த ஐந்தாண்டுக் காலத்தில் நிறைவேற்றப்படுவதாக, அம்மையார் ஆச்சரியத்தோடு கூறுகிறார் —அந்த வெற்றிக்குக் காரணம், ரஷ்யத் தலைவர்களின் திறமையும் மக்களின் ஆர்வமும் என்கிறார்.

மனிதன் தவழ்ந்து வாழ, நிலமிருக்கிறது — வழிந்தோடும் நீரைப் பாய்ச்சினால் வளம்பெற வழியுமிருக்கிறது—காடு உண்டு — மேடு

உண்டு—கனிகள் உண்டு—சுரங்கப் பொருள்கள் உண்டு—தோண்டினால் தங்கம், இரும்பு, நிலக்கரி — இவ்வண்ணம், இயற்கை ஏராளமான செல்வங்களைக் குவித்திருக்கிறது. இந்தச் செல்வமனைத்தையும் மக்களின் வாழ்வுக்குப் பயன்படுத்தக் கூடிய, மனிதசக்தியும், இருக்கிறது. அதை எப்படி யெப்படிச் செய்ய வேண்டும் என்பதற்கான விஞ்ஞான அறிவும் வளர்கிறது. எனவே, இவையனைத்தையும் பயன்படுத்தினால், நலம் பெறமுடியும்! வாழ்வில் புது மலர்ச்சி காணமுடியும்!!

'இவ்வளவிருந்தால் போதுமா?
இதை நிறைவேற்ற பணம்
வேண்டாமா!''

இப்படிக் கேள்வி எழும்பலாம் — உண்மையுங்கூட. ஆனால், பணம் என்பது ஒரு நாட்டின் வளத்தையும் அங்கு விளையும் பொருள்களையும், உற்பத்தியையும் வைத்துக் கணக்கிடப்படுவதாகும்!

வளமிருக்கிறது— அதை வளப்புள்ளதாக்கும் மனித சக்தியும் இருக்கிறது. இந்தச் சக்தியைச் செவ்வனே பயன்படுத்த, பணமல்ல ஒரு தடைக்கல் — ஆளவந்தாரின் திட்டமும், அவர்களின்கொள்கையுமேயாகும்.

விடுதலை பெற்ற ரஷ்யா, வெளிநாட்டிலிருந்து, 'பணத்தை'க் கொண்டுவந்து இவ்வளவு காரியங்களையும் சாதிக்கவில்லை. புதுவாழ்வு பூத்திடச் செய்யும் சீனு, 'எங்கே பணம் வாங்கலாம்?' என்று யோசித்தல்ல, தன் திட்டங்களை நிறைவேற்றுவது.

பணம் ஒரு சாதனம்: அதனைச் சிருஷ்டிப்பதும், செலாவணியாகச் செய்வதும், மனிதன்தான்.

மனித சக்தியை மீறியது, எதுவும் கிடையாது உலகில்.

இதனை நன்குணர்ந்தன ரஷ்யாவும், சீனுவும். இந்தப் பெரும் நாடுகளிரண்டும் சற்றேறக்குறைய இந்தியாவைவிடக் கேவலமாக இருந்தவையாகும். இவ்விரு நாடுகளின், முதன்மையான தொழில், விவசாயம்தான். இப்போது மலர்ந்திருக்கும் பொதுவுடைமை அரசாங்கம் பூக்குமுன், ரஷ்யா—ஜாரின் பிடியில் சிக்கித் தவித்தது. சீனு, வெளிநாட்டாரின் கைப்பொம்மைபோல் கிடந்து; சீரழிந்தது.

வெள்ளையன் பிடியில் சிக்கிக் கிடந்ததால், இந்திய உபகண்டத்தில், வேலையில்லாதார் தொகை அதிகமாகிவிட்டதாக், காங்கிரஸ் மந்திரிகள், காரணம் காட்டுகின்றனர்.

உண்மை; ஒப்புக்கொள்வோம்— முன்பு ஆண்டவன், விளைத்த விபரீதங்களாகவே இருக்கட்டும்.

ஆனால், எப்படி இவர்கள், மற்றோர் கொடுங்கோலாட்சியை அகற்றிவிட்டு, சுயராஜ்பதேவியை அரசுபீடத்தில் அமர்த்தினர்களோ அதேபோலத்தான் ரஷ்யாவும் சீனுவும் தமக்கு முன்னிருந்த எதேச்சாதிகாரப் பிடியினின்றும்தத்தமது பூமியை மீட்டனர். எனவே, கொடுங்கோலை, நீக்கிய பெருமை, இந்திய வீரர்களுக்குமட்டுமல்ல; அவர்களுக்கும் உண்டு. இந்[...] எப்படி மாற்றானின் பிடியில்[...] மடிந்ததோ, அதேபோல சீனு[...] ரஷ்யாவும் கொடுங்கோலரின்[...] யில் சிக்கிச் சிதைந்தது; சீரழிந்[...]

ஆனால், இன்று அவை சிங்கா[...] தோட்டங்களாகி வருகின்[...] இந்த உபகண்டமோ, விரிந்த [...] வனமாகி வருகிறது!!

*

ரஷ்யா, சிங்காரத் தோட்டமா[...] காட்சியளிப்பதற்குள்ள காரண[...] தலைவர்களுக்கிருக்கும் திறமை[...] மக்களிடமுள்ள ஆர்வமும் என[...] குறிப்பிடுகிறார், தோழியர் இந்தி[...]

மறுப்பதற்கில்லை, தலைவர்களி[...] திறமை இருந்துவிட்டால் மட்[...] போதாது—மக்களிடம், ஆர்வ[...]





[...]கவேண்டும். தோழியர் இந்தி[...]ன் கட்டுரையில், 'அத்தகைய [...]ம் நம்முடைய மக்களிடம் [...]ாமலிருக்கிறதே!' எனும் விசா[...] தொனிக்கிறது. நாட்டின் நல்[...]வை நினைப்போருக்கு, இந்த [...]ம், எழும் பாமற்போகாது!

[...]க்களிடம் ஆர்வம் இல்லை — [...] காரணம்?

[...]க்கார் போடும் திட்டங்களை [...]வேற்றுவதில் ஆர்வம் இல்லை—

[...]த்தனைக்குரிய விஷயம்தான். [...]மையில், சென்னை மாநில[...]னர் பிரகாசாவும், இந்த அதி[...]லையைத் தெரிவித்திருக்கிறார். [...]டாபரில் ஆந்திர அரசு மலரப் [...]கின்றதல்லவா? அதைப்பற்றி [...]ர கிராமவாசிகளிடம் சென்று [...]ர் விசாரித்தாராம். அவர்[...]க்கு, ஒன்றும் புரியவில்லையாம்! [...]த்தார்களாம்!!

[...]ன்னைச்சுற்றி—நாட்டைச் சுற்றி [...]டைபெறும் காரியங்களை, அறி[...]ட முடியாத நிலையில் இருக்[...]ன், நம்நாட்டுக் குடிமகன்.

[...]ஐந்தாண்டுத் திட்டம்'' சென்று [...]ட்டுப்பாருங்கள். புரியாது! தெரி[...]து!!

[...]கம்யூனிடி திட்டம்'' கிராம[...] [...]சேபுகளில் பலருக்கே தெரி[...]து! புரியாது!!

[...]அந்தளவுக்கு, ஆங்காங்கே [...]ழும் மக்களிடையில், அந்தகாரம் [...]ந்திருக்கிறது.

[...]அவனவன், அன்றன்றுடம், தன்[...]டைய வயிற்றைக் கழுவ வழி [...]னா? என்று யோசிப்பதையே [...]க்கியமாகக் கருதுகிறான். [...]தாழனே! இது, என்ன தெரி[...]ா, பலாச்செடி. பத்து வருஷத்[...] பழம் பழுக்கும். அதன் பழம் [...]வளவு இனிப்பாக இருக்கும் [...]ரியுமா?'' என்று அவனிடம், [...]னால், சிரிப்பான்! சீறுவான்!!

[...]அந்தளவுக்கு, மக்கள் மன்றத்[...], இந்த ஆட்சியாளரைப் பற்றிய [...]வநம்பிக்கை உருவாயிருக்கிறது. [...]தற்குக் காரணம், நம் நாட்டு [...]டிமகனல்ல; காங்கிரஸ் தலைவர் [...]தான். சுயராஜ்யப் போரின் [...]ாது, அவ்வளவு, நம்பிக்கையைத் [...]ந்தார்கள். வெற்றிகிட்டி, தர்பாரில் [...]மர்ந்ததும், அத்தனை நம்பிக்கைகளையும், காற்றில் பறக்கவிட்டு விட்டார்கள்.

*

சுயராஜ்யம்—என்பது, வெள்ளையனிடமிருந்து, அதிகாரத்தைப் பெறுவது, என்று மட்டுமே, கருதினர்கள்.

இந்தக் கருத்து, காங்கிரஸ் தலைவர்களிடம் குடிபுகுந்திருப்பதையே, சுயராஜ்யம் மலர்ந்தபோது, குறிப்பிட்டோம்—நாம்.

தர்பார், 'இலண்டனிலிருந்து', 'டில்லி'க்கு வருகிறது.

பழுப்பு நிறத்தான் போய், மஞ்சள் நிறத்தான் செங்கோலேந்துகிறான்.

வெள்ளைமுதலாளியின் பிடியிலிருந்து வடநாட்டு முதலாளியின் கைக்கு, ஆட்சி, செல்கிறது

எனக் கூறினேம் — நாம், இவ்வண்ணம் கூறியதை, பண்டிதரைப் பழிப்பதாகவும், பட்டேலைக் குறை கூறுவதாகவுமே, காங்கிரஸ் நண்பர்கள் கருதினர்களேயொழிய—உண்மையை உணரவில்லை. முதலாளித்துவம், எனும் சிலந்திக் கூட்டில், காங்கிரஸ் அமைப்பு, சிக்கிக் கிடக்கிறதென்பதை, உணர மறுத்தனர். தேசிய ஆர்வம், அவர்கள், கண்களைத்திரையிட்டது! விளைவு—சுயராஜ்யம் வந்தும் சுகம் மலரவில்லை.

*

மாற்றானின் பிடியிலிருந்து விடுதலை பெறும் நாட்டிற்கு, 'அதிகாரம்' மட்டும் கிடைத்துவிட்டால், போதாது — அத்தகைய நற்பணிக்காகப் போராடியோரிடம், 'அதிகாரம் பெற்றபின் என்ன செய்ய வேண்டும்', என்கிற, திட்டங்களும் இருக்க வேண்டும். மாற்றான் காலத்தில் உயர்ந்த மாடிகளையும், தாழ்ந்த குடிசைகளையும் கணக்கிட்டு இரண்டையும் ஒரு நிலைக்குக் கொண்டு வரும், பொருளாதாரத் திட்டம், இருக்கவேண்டும்.

"இதோ! இருக்கிறது, வார்தாத் திட்டம். பசுவும் புலியும் ஒரு இடத்தில் நீர் அருந்தும் திட்டம்''

"இதோ! 14 அம்சத் திட்டம்— எல்லாம் சரியாகிவிடும்''

இவ்வண்ணம், பேச்சுக் கச்சேரி செய்து, பெருமைகளை 'வானொலி'யில் பரப்புவதில், தேசியத் தலைவர்கள், ஈடுபட்டார்களேயொழிய, வெளிநாட்டான் பிடியில் சிக்கி விடுதலை பெற்ற ஒரு நாட்டின் பொருளாதாரத்துறையில், 'சுதந்திரம்' காண விரும்பவில்லை. பசுவும் புலியும் உறவு கொண்டாடும் என்றனர்.

பசு சாகிறது! புலி இரத்தம் குடிக்கிறது!!

ஏழை சாகிறான்! ஏற்றங் கொண்டோன் உலவுகிறான்!!

இதை, நாம் கூறினால், 'பழைய பல்லவி', என்று தேசிய நண்பர்கள் கருதுவார்கள். ஆகவே, அவர்தம் செவிக்கு, செந்தேன் ஊற்றுகிறோம். கீழே வருவது, தோழர் ஆச்சாரிய கிருபளானி, பார்லிமெண்டில், வேலையில்லாதார் பிரச்னை குறித்துப் பேசியதாகும்:-

"சுயராஜ்யம் பெற்றுவிட்டால், நிலங்களைப் பகிர்ந்து கொடுத்து, சீர்திருத்தங்கள் செய்வோமெனச் செப்பினேம். காலம் தாழ்த்தி விட்டோம்.

பெரிய பெரிய ஆலைகளைக் கட்டப் பணம் தேவையெனக் கருதி, வெளிநாட்டாரைக் கெஞ்சினேம். வெள்ளையன் காலத்தில் இல்லாத அளவுக்கு, வெளிநாட்டார், வந்து நம் தொழில்களைக் கைப்பற்றிக் கொண்டிருக்கிறார்கள். பொருளாதார விடுதலை, பெறவில்லை, நாம்! நம் தொழில்—வியாபாரம் — நிதி எல்லாம், கட்டுண்டு கிடக்கின்றன. நம்முடைய தேயிலைத் தோட்டங்கள்—நூற்றுக்கு எண்பது—வெள்ளைக்காரர்கள் வசமே இருக்கிறது. நம்முடைய பாங்கிகள், இன்ஷூரன்ஸ் கம்பெனிகள் யாவும் அவர்கள் வசமே, உள்ளன. ஆதலால், நம்முடைய பொக்கிஷமோ, காலியாகிறது! ஐந்தாண்டுத் திட்டம் என்று தீட்டி வருடம் 2½ ஆகிறது- என்ன கண்டோம்?—மேலும் 15½ லட்சம் வேலையில்லாதோர் அதிகமாகியிருக்கிறார்கள். எங்கும் காண முடியாத காட்சி இது! ஐந்தாண்டுத் திட்டம் ஒரு பக்கம் — அவதியுறுவோர் தொகை அதிகரிப்பது மற்றோர் பக்கம். ரஷ்யாவைப் பாருங்கள்!—ஏன்?—போரில் சிதைந்த ஜெர்மனியையும் பாருங்கள். அங்கெல்லாம், மக்களுக்கு, வேலை கிடைப்பது மட்டுமல்ல — நிறைய வேலை செய்ய வேண்டியவர்களாகவும் இருக்கிறார்கள். ஏனெனில்,

(9-ம் பக்கம் பார்க்க)

**வாழ்த்தும் வணக்கமும்**

தாயகத்தின் விடுதலைக்காக, மழலையின் மொழியையும் மனைவியின் காதலையும் மறந்து, பெற்றோரிடம் விடைபெற்ற வண்ணம், அறப்போரிலீடுபட்டு, ஆளவந்தாரின் வெறியாட்டத்துக்கு இரையாகி, சிறைச்சாலைக்குள்ளே கிடக்கும், தாயகத்தின் கண்மணிகளாம் நம்முடைய சகோதரர்களுக்கு, நம்முடைய வாழ்த்துதல்களையும் வணக்கங்களையும் தெரிவித்துக் கொள்கிறோம். வாழ்க, வீரர்கள்! ஒழிக அடக்கு முறை!!

# திராவிடநாடு

காஞ்சி] 13—9—53 [ஞாயிறு

## கொடுங்கோல் ஒழிக

திராவிடத்தின் மடியிலே, சிங்கார நடைபோட்டு வந்த திராவிட முன்னேற்றக்கழகம், கடந்த இரண்டு மாதங்களாக, ஆளவந்தோரின் கொடுமையால், அடைந்து வரும் இன்னல் பட்டியல், கொஞ்சமல்ல. தி. மு. க.வுக்கு வயது 'நாலு' ஆகிறது. பிறந்த தேதியாம் 17-9-53 வந்துவிட்டது. தளிர்நடைப் பருவத்தில், தாய்மண் கண்டு, பரவசமடையும்படி, ஊர்ந்து திரிந்து, மகிழ்ந்துலாவிய அதனை, 'மாற்றாந் தாய்'க்கு அடிமையான மந்திக் குணம்படைத்த கள்ளி, குரல் வளையை அறுக்கவும், உயிரைப் போக்கவுமான, அடக்கு முறைகளில் ஈடுபடுகிறாள். 'கள்ளி'க் குணம்படைத்த காவலர்களின் ஆட்சியில், கடந்த ஜூலை 13-ந் தேதி முதல், தி. மு. க, அடைந்து வரும் அவதிகள், ஏராளம். சிறைகள், திறக்கின்றன! மூடுகின்றன!! நீதி மன்றத்தின் படிகளில் ஏறி இறங்கிய வண்ணம் இருக்கிறார்கள், தோழர்கள்— பலருக்கு நீதி மன்றமே காட்சியளிக்காதபடி 'சிறை' பூட்டியும் வைத்திருக்கிறது. இந்தக் கொடுமைகளைக் காண்போரின் இதயம், கொதிக்காமற் போகாது! நாட்டின் நல்வாழ்வுக்குப் பாடுபடும் ஓர் சிந்தனையாளர் கூட்டத்தை — ஆட்சி கையிலிருக்கிறதெனும் தைரியத்தில்—சித்ரவதை செய்தும், சிறைக்குள் தள்ளியும், சிதைத்துவிட முயல்கிறது, ஓர் ஆட்சி — ஆமாம்! ஆச்சாரியார் அவர்களுடைய ஆட்சி. சுயநல விரோதத்தைக் காட்டி நம் தோழர்களையும் தலைவர்களையும், 'தொலைத்திட' சதி செய்கிறார், அவர். ஆம்! அவர் — ஒரு தனிநபர். அவரது அட்டகாசப் போக்கினை, காங்கிரஸ் தோழர்களில் பலரும்விரும்பவில்லை. ஏனெனில் நம்மை, அறிவோர், பலரிருக்கிறார்கள், அங்கும். ஆயினும், கட்சிக் கட்டுப்பாட்டால், நமக்கு—இழைக்கப்படும் கொடுமைகளைக்கண்டு, கண்ணீரைத் துடைத்தபடி, 'ஜே!' போட வேண்டியவர்களாகியிருக்கிறார்கள். அவர்கள், கண்களிலும் நீர்வழிகிறது! அத்தகைய, கண்ணியம் நிரம்பிய கழகம், நம்முடையது!!

ஆனால் அன்பர் ஆச்சாரியார், கண்ணியம் நிரம்பிய நம் கழகத்தை அழித்திட, முனைக்கிறார் — ஆவலோடு, திட்டங்கள் 'வகுத்தபடி' உள்ளார். இந்த நாசவேலையைக்கண்டிக்க நாட்டின் நல்லறிவாளர் பலர் முன்வந்துள்ளனர் — அவர்களுக்கு நம் நன்றி. முன்னணிக் கட்சிகளில் சில ஆளவந்தாரின் அக்கிரமத்தைக் கண்டித்துள்ளன. அவைகளின், பொறுப்புணர்ச்சியை வாழ்த்துகிறோம். நாம் இன்று அவதியடைவதைப்போல், அன்றோர் நாள் அவதியடைந்த கம்யூனிஸ்டுக் கட்சியும்—தன்ஏட்டில் தலையங்கம்தீட்டி இருக்கிறது, அந்தளவுக்கு மகிழ்ச்சி.

'புதியதோர் உலகு செய்வோம்!' எனும் கருத்தேந்திய காளைகளை, காராக்கிரகத்தில் அடைத்து, தர்பார் நடாத்தும், எவரும், வாலிப உலகிடம், தப்பியதில்லை. அதனை, நன்கறிவோம், நாம். ஆகவே, இந்த நாளில், நம்முடைய இதயங்களில் கொழுந்துவிட்டெரியும், இலட்சியச் சுடரினை, எண்ணிக்கொள்வோம்! அதனை, அணைக்கவரும், அட்டூழியச் சூறுவளியைத் தடுக்கும், ஆற்றல் மிக்கோர், நாம். ஆகவே, அந்த ஆற்றலைக் காட்டுவோம் — கண்ணியத்தோடு; கட்டுப்பாட்டோடு. நாம், எழுப்பும், முழக்கம், சிறைக் கதவுகளைத் திறக்கட்டும்! நம்முடைய பணி, கொடுங்கோலினைச் சாய்க்கட்டும்!! ஒழிக, அடக்குமுறைதர்பார்! வாழ்க தியாகச் செம்மல்கள்!!

★

## அந்த ரூ. 700

1950 செப்டம்பர் [...] பொதுச் செயலாளர் அண்[...] காங்கிரஸ் அரசாங்கம், தி[...] சிறைக்குள் பூட்டியதைத் [...] கள், அறிவார்கள். 1946ல் [...] 'ஆரிய மாயை' நூலுக்காக, [...] வழக்குத் தொடர்ந்து 153-[...] ஷனை விசி, ரூ. 700 அபரா[...] லது ஆறு மாத சிறைவாசம் [...] தீர்ப்பைப் பெற்றனர், [...] தோர்.

சிறைக்குள் பூட்டியதும், [...] விடும் குமுறியதையும், [...] பெற்ற நிகழ்ச்சிகளையும் [...] மிரண்டதால், 10 நாட்களு[...] லாம், வெளியே திறந்துவிட்[...] திறந்துவிட்டதோடு விடாம[...] டிசம்பர் மாத மத்தியில், அப[...] தொகை ரூ 700ஐயும் [...] செய்தே தீருவோமென [...] சென்னை தங்கசாலை வீதி [...] இருந்த நமது அலுவலகத்[...] நுழைந்து 'காகிதப் பேல்க[...] தூக்கிச் சென்றனர். வரிமேல் [...] போட்டும் 'வாழமுடியாத' சர்[...] இவ்விதமும் பணவேட்டை [...] போலும்! — என்று, நாட்[...] கேலி பேசினர்.

'ஆரியமாயை' வழக்கை, [...] வெளியிட்ட திராவிடப்பண்ணை [...] உயர்நீதி மன்றம் கொண்டு செ[...] னர்—அங்கே, தண்டனையை [...] செய்தும், 'அண்ணா திரா[...] என்று தீர்ப்பளிக்கப்பட்டது. [...] லித்த அபராதத் தொகையை [...] பத் தருமாறும் உத்திரவிட்[...]

இது, 1952 மார்ச்சு மா[...] நிகழ்ந்தது. ஒன்றரை ஆண்[...] ஓடிவிட்டன—உயர்நீதி மன்றத்[...] தீர்ப்பைப் பெற்று.

நம் அலுவலகத்திலிருந்து [...] வசூலித்ததைத் திருப்பித்[...] மாறும், நீதிமன்றம், உத்திர[...] டது.

இன்றுவரை—அந்தத் தொ[...] நமக்குக் கிடைக்கவில்லை.

இது சம்பந்தமாக நம்மு[...] வழக்கறிஞர் திருச்சி கைலாச[...] அரசியலாருக்கு பன்முறை, எழு[...] மிருக்கிறார். பலனில்லை! நம்மு[...] பணமும் திரும்பி வரவில்லை! [...]

நீதி உத்திரவிட்டும் இவ்[...] திருப்பித் தரவில்லை; அந்[...] அரசாங்கம், இருக்கிறது—[...]



## திருமணத் தீர்ப்பு

★

'சுயமரியாதைத் திருமணம் செல்லுபடி யாகாது; பதிவு செய்யப்பட்டிருந்தாலே, செல்லுபடியாகும்'' —என்று, சென்னை உயர் நீதி மன்றத்தில், தீர்ப்பொன்று, வழங்கப்பட்டிருக்கிறது

''எந்த வகையான திருமணமானாலும்—பதிவு செய்யப்பட்டால் தான் செல்லுபடியாகும்'' என்று பம்பாய் சர்க்கார், சட்டமொன்று கொண்டுவர. முடிவு செய்திருப்பதாக, செய்திகள் வந்துள்ளன.

*

மூடநம்பிக்கைகளோடு, 'உயர் குலத்தாருக்கு', கட்டுப்பட்டு கலியாணங்கள் நடப்பதைக் கண்டிப்பதுதான், சுயமரியாதைத் திருமணங்களின் நோக்கமாகும். ஆனால், சென்னை உயர் நீதி மன்றம், இந்து மத முறைக்கு ஆதரவளிக்கும் வகையில் தீர்ப்பளித்துள்ளது. தீர்ப்பைப் பற்றி, விமர்சிப்பதல்ல, நம் நோக்கம்—தேவையுமில்லை. ஆனால், அந்தத் தீர்ப்பின் மூலம், வெளிவந்துள்ள ஒரு விஷயத்தை மட்டும், தோழர்கள் பார்வைக்குக் கொண்டு வருகிறோம். 'திருமணங்கள் பதிவு செய்யப்பட வேண்டும்'', என்பது தான், அது. நாம், எல்லாத் திருமணங்களிலும், இதனை வலியுறுத்தி வந்துள்ளோம். இம்முறை, அமுல் நடக்கத் துவங்குமேயானால். ஆரிய மத முறைகளை மக்கள், சிறிதும் ஏறெடுத்துப்பாரார்! எனவே, இனிமேல், திருந்திய முறையில் செய்யும் திருமணங்கள் எல்லாவற்றையும் பதிவு முறையில் நடத்துவதென்பது, மிகமிக வரவேற்கக் கூடிய காரியமாகும். ஏனெனில், பதிவுத் திருமணம் தான், சுயமரியாதைத் திருமணம்!—இதனை அறியாததால் தான், தேசிய ஏடுகள், நீதி மன்றத்தின் தீர்ப்பை, 'சு. ம. திருமணம் செல்லுபடியாகாது,' என்று பிரமாதமாகப் பிரசுரித்து விட்டன ஆரியமத முறைகளை நீக்குவது மட்டுமல்ல, சுயமரியாதைத் திருமணத்தின் நோக்கம்! பதிவு முறையிலும் நடைபெற வேண்டுமென்பதுதான்!!

ஆனால், ஆரியமத முறைகளை நீக்குவோரைக் கண்டிப்பது போல, தீர்ப்பின் விளக்கம், வெளிவந்துள்ளது, மத ஏடுகளில்.

அதே, ஆரியமத முறைகளுடன் திருமணம் செய்து கொண்டாலும், திருமணங்கள் யாவும் பதிவு செய்து கொள்ளப்பட வேண்டும் என்று சட்டம் கொண்டுவர, பம்பாய் அரசாங்கம், ஆலோசிக்கிறது.

பம்பாயின் பாதையை, ஆரிய மதமுறைகளைக் காக்க விரும்பும் ஆச்சாரியார் அரசாங்கம், பின் பற்றுமா என்பது, சிந்தனைக்குரிய விஷயம்.

ஆகவே, அரசாங்கம் என்னசெய்கிறதென்பதைப்பற்றிக் கவலைப்படாமல், அறிவுப் பாதை செல்லும் தோழர்களெல்லாம், பதிவுத் திருமணங்களாகவே செய்யவேண்டும்.

உயர்நீதி மன்றத் தீர்ப்பு, நமக்கு பாதகம் விளைவிப்பதல்ல. பல குடும்பங்களில் 'பதிவுத் திருமணம்'என்றால் பெண்ணை அங்கேயெல்லாம்அழைத்துப் போவதா?' என்று அங்கலாய்த்து, முட்டுக்கட்டை இட்டனர். அதனை முறியடிக்க, வாய்ப்பளிக்கிறது, தீர்ப்பு!

★

(7-ம் பக்கத் தொடர்ச்சி)

அவர்களும், நாட்டுக்கு நன்மை பயக்கும் திட்டங்களை வைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

நம்முடைய நாட்டிலோ, ஆலைகளிலிருந்து ஆட்களைக்குறைக்கிறார்கள்—அதிக உற்பத்தியாகி விட்டால் என்ன செய்வது, வியாபாரம் செய்ய முடியாதே என்று அஞ்சுகிறார்கள். ஏனெனில், மக்களிடம் பொருள்களை வாங்கக் கூடிய சக்தி இல்லை. இதில் இன்னொரு ஆச்சரியம் என்னவென்றால், மக்களிடம் பணம் இல்லை! ஆனால் விலைவாசிபோ ஏறிக்கொண்டே போகிறது!! எனவே, ஏதோ தவறு இருக்க வேண்டும். தனிப்பட்டோர் வசம் உற்பத்தி இருப்பதுதானே இதற்குக்காரணம்?

நம்முடைய ஐந்தாண்டுத் திட்டம், முதலாளித்துவ முறைப்படி வகுக்கப்பட்ட திட்டம் என்று பொருளாதார அறிஞர்கள் கூறுகிறார்கள். தனிப்பட்டோர் லாபம் சம்பாதிக்கும் வழி இருக்கிறதே—ஒழிய, எல்லோருக்கும் வேலை கொடுக்கும், எண்ணமில்லை. இந்த கையகு நாட்டத்தின் விளைவாகவே, கடந்த ஆறு ஆண்டுக் காலத்தில், நாடு இவ்வளவு க்ஷீணதசைக்கு வந்திருக்கிறது இதைப் போக்க என்ன செய்வது? நாட்டின் நலனை உத்தேசித்துச் சொல்கிறேன். இந்தியாவின் பொருளாதாரம், முதலாளித்துவ அடிப்படையில் இருக்கக் கூடாது. ஏனெனில், இந்த முறை, முதலாளித்துவ நாடுகளில் கூட, சரிவர நடைபெறவில்லை. போரின் விளைவால் ஏற்பட்ட சங்கடங்களோடு வாழும் அந்த நாடுகள் கூட, புதுவழி காணமுயல்கின்றன. முதலாளித்துவநாடுகளில் பலவற்றிற்கு, தங்களுடைய உற்பத்திப் பொருள்களைக் கொண்டு குவிக்க அடிமை நாடுகளை (காலனிகள்)ப் பெற்றிருக்கின்றன. ஆனால், இந்தியாவைப் போன்று, ஏராளமான மக்கள் வாழும், ஒரு நாட்டில் முதலாளித்துவ முறை இயங்க முடியாது. ஆகவே, பொருளாதார அடிப்படையையே மாற்ற வேண்டும். அதற்குள்ள வழி சோஷியலிசப்பாதைசெல்வதுதான். ...சர்க்கார் உண்மையிலேயே கவலை கொண்டிருக்குமானால், பாங்கிகளையும், இன்ஷூரன்ஸ் கம்பெனிகளையும் தேசிய மயமாக்கவேண்டும். நான், நம்முடைய வர்த்தக மந்திரியாருக்கு ஒன்று சொல்வேன்— 'வெளிநாட்டு ஆசாமிகளை இறக்குமதி செய்யாதீர்கள்!' அவர்களின் கம்பெனிகளில் எத்தனைபேர் வேலை செய்கிறார்கள் என்று சர்க்கார் புள்ளிவிபரம் கேட்டதற்கு, அவர்கள் கொடுக்கவில்லை — மறுத்திருக்கிறார்கள். எந்த நாட்டிலும் காணமுடியாத காட்சி — இங்கே, காண்கிறோம்!''

*

காந்தீய லீடர், ஆச்சாரிய கிருபளானி, இவ்வண்ணம் பேசியிருக்கிறார்.

ஐந்தாண்டுத்திட்டமிட்டு ஆண்டுகள் $2\frac{1}{2}$ ஆகின்றன.

அதில், வேலை இல்லாதோர் பிரச்னைபற்றிய விஷயம் இப்போது தான் சேர்க்கப்படுகிறது.

எவ்வளவு விசித்திரம், இது? இத்தகைய ஆட்சியாளரிடம், மக்களுக்கு எவ்வண்ணம் ஆர்வம் பிறக்க முடியும்!

வேலை இல்லாதோர் — அலைந்து கொண்டிருக்கிறார்கள்.

"வேலையற்றவர்களுக்கு 'உதவி' செய்துவிட்டால் போதாது — அந் தப்போக்கை. நான் கண்டிக்கிறேன் அவர்களுடைய பிரச்னைக்கு, நிரந் தரமான பரிகாரம் தேடவேண்டும்" என்கிறார், பண்டிதநேரு—கோபத் துடன்.

எப்படிச் செய்யப் போகிறார், இதை!

இதோ, இந்திரா, முதலாளித் துவம் ஒழிக்கப்பட்ட ரஷ்யாவைக் காட்டுகிறார்! தோழர் ஆச்சாரிய கிருபளானி, முதலாளித்துவத்திட் டம் பயனளிக்காது என்கிறார்!!

பண்டிதரோ—'பழைய பல்லவி' யையே பாடுகிறார் — எங்ஙனம் பயன் தரமுடியும்.

"பணத்தை, உற்பத்தி செய்பவன் மனிதன்"

என்பதை மறந்து, "பணத்தைக் கொண்டுதான், மனிதனை சரிசெய்ய முடியும்"

என்ற கருத்துடன், பழைய முதலா ளித்துவ முறையிலேயே, சீர்திருத் தம் செய்ய முற்பட்டால், என்ன பயன் விளையமுடியும்? பசு, சாகும்! புலி வாழும்!! — இந்திரா, சோகக் கட்டுரை தீட்டுவார் — ஏழைகள் உலகில், தீயவனும் திருடனும், கள் ளனும், காமுகனும், உருவாகும். நாடு காடாகும்! இதை அறியவேண் டும், முதலாளித்துவ மாடியை இடிக்காமல், முன்னேற்றம் காண விரும்புவோர்.

★

## விசித்திர சித்தர்கள்

கடந்த செப்டம்பர் 3-ந்தேதி, தன்னுடைய மந்திரி சபையில் சில மாறுதல்களைச் செய்திருக்கிறார், பிரிட்டிஷ் பிரதமர், சர்ச்சில்துரை.

மாறுதல்களின் காரணமாக 9500 பவுன், பிரிட்டிஷ்பொக்கிஷத்துக்கு மீதப்படுமாம்.

அதிகச் செலவைக் குறைக்கும் நோக்குடன், அவ்வித நடவடிக் கையை எடுத்திருக்கிறார், சர்ச்சில்.

பதவியிலிருந்து அவரால் நீக்கப் பட்ட சிலர், சாதாரணமானவர் களல்ல — அவருடன் நெருங்கிய நேசம்கொண்ட நண்பர்கள், திறமை மிக்க ராஜதந்திரிகள்.

எனினும், செலவைக் குறைக்க அவர்களை விலக்கச் செய்திருக்கிறார்.

இது, இயந்திர வளமும், உலக வல்லரசுகளில் ஒன்றாகவும் கருதப் படும் இங்கிலாந்தில்! ஆனால், இங்கோ!!

மந்திரி சபைக்கென்று மாதா மாதம், லட்சக் கணக்கான ரூபாய், செலவிடப்படுகிறது. மந்திரிகளின் கூட்டம் கொஞ்சம்கூட குறைய வில்லை — டில்லி அமைச்சர்களைக் குறித்துப் பார்த்தால் கூடியவிரை வில் அவர்கள் கூட்டம் ஒரு 'பஞ்சா யத்து நகரமே' ஆகிவிடும்போலிருக் கிறது. அந்தளவுக்குமந்திரிக்கும்பல், அதிகரித்துக்கொண்டு போகிறது. இதனால், இந்தியப் பொக்கிஷத்தில் விரயமாகும் தொகை, மிக மிக அதிகம்!

இவ்விதம், கஜானாவைக் காலி செய்துவிட்டு, பணமில்லை! பண மில்லை!! என்ற பல்லவியை பாடுகின் றனர்.

சென்னை சர்க்கார் கேட்டால் — 'பணம் கிடையாது.'

வேலையற்றோர் திண்டாட்டத் தைப் போக்கவேண்டுமென்றால் — 'பணம் கிடையாது.'

இவ்விதம், எதற்கெடுத்தாலும், ஒரே பல்லவி!

ஆனால், பணம் பாழாகிக்கொண்டி ருக்கிறது. மந்திரிகள் கும்பல் அதி கரிப்பதில்மட்டுமா? அல்ல அல்ல!! அதேபோல, வேண்டியவர்களுக் கெல்லாம், அதிகாரங்களைக் கொடுப் பதமூலம். அதனை அண்மையில், இந்தியப் பாராளுமன்றத்தில், தோழர் பிராங்க்அந்தோணி என் பார், எடுத்துரைத்திருக்கிறார். அவர், முற்போக்குக் கட்சிகளைச் சேராதவர். அவர் கூறுகிறார்,—

"ஆங்காங்கும் கவர்னர்கள் இருப் பது, எதற்காக? இது தேவையற்ற வீண்செலவுதானே! அதோடு, ராஜாங்க சபை (மேல்சபை) ஏன் இருக்கவேண்டும்? இது நமக்கு ஒத்துவராத ஒரு வீண்டம்பரமாகும்! இந்த வழிகளால், நம்முடைய பணம் எவ்வளவோ வீணாகிறது. அதோடு, மந்திரிகளின் கூட்டத்தை நாம் குறைக்கவேண்டும். டெபுடி மந் திரிகள், பார்லிமெண்டரி செகரிட் டேரிகள்—என்கிற கூட்டம் எதற்கு? உயர்ந்த உத்தியோகஸ்தர்களுக்கு சம்பளம் அதிகமாகக் கொடுக்கப் படுவதேன்! இவ்விதமெல்லாம் பணத்தை வீரயம் செய்வது போதா தென்று, காஷ்மீரப் பிரச்னைக்காக வும், சர்க்கார், பணத்தைக்கொட்டி அழுகிறது. இவ்விதம் விரயமாகும் பணத்தையெல்லாம், மத்யதர வகுப்பு மக்களின் வாழ்க்கையை உயர்த்தும் திட்டங்களில் ஏன் செல விடக்கூடாது?" என்று கேட்டிருக் கிறார். அவர், சர்க்காரால், ஆலோ சனை நல்கும் அருகதையுள்ளவர் எனும் கருத்தில், நியமனம் செய் விக்கப்பட்ட உறுப்பினராகும்! அவர், இவ்வண்ணம் கூறுகிறார்.

இதோ, இங்கிலாந்தில், சர்ச்சில், 9500 பவுனைச் சேமிப்பதற்காக, செய்தும் காட்டுகிறார். ஆனால், ஏழை இந்தியாவில் செலவுபெருகு கிறது—விஜயலட்சுமியும் மேனனும் மாதத்துக்கொரு முறை அமெரிக் காவுக்குப் பறக்கின்றனர்—எதிர்த் துப் பேசினால் 'இங்கேவா!' என்று மந்திரிகளாக்கி மகுடம் சூட்டுகிறார், பண்டிதர். அதே நேரத்தில் 'பண மில்லை! பணமில்லை!' எனும் பல்லவி யும் ஓயவில்லை.

✻

### கழகத் தோழர்கட்கு

ஜூலை-15 அறப்போரில் கலந்துகொண்டு, சிறை சென்ற, வீரர்களின் பெயர்கள் யாவும், 'திராவிடநாடு' தி. மு. க. மலரில், இடம்பெற வேண்டுமாதலால், ஒவ்வொரு ஊர் கிளைக்கழகச் செயலாளரும், மேற்படி விபரங் களை உடனடியாக (16-9-53-க் குள்) அனுப்ப வேண்டுகிறோம்.

ஆ—ர்.



## ஒட்டு வேலைக்குத் தேவைப்பட்ட ஆச்சாரியார்!

16-ம் பக்கத் தொடர்ச்சி

சட்டசபைக் காங்கிரஸ் கட்சி யினரின் ஒருமித்த வற்புறுத் தலின் பேரிலேயே, கட மையை முன்னிட்டுப் பணியாற்ற முன்வந்தார்" என்று "தினமணி" கூறுவதற்கேற்ப, ஆசிரமம் ஏக வேண்டியவரை அரசியல் பீடத்தில் ஏற்றிவைத்திருப்பது 'மகாபாபம்' என்று கருதியதாலோ அல்ல.

அரசியல் சம்பந்தப்பட்ட எந்த விஷயமும் ஆச்சாரியாரின் தலைமை மையில் தான் ஒழுங்காக நடைபெற முடியும் என்ற சிலரின் தப்புக் கணக்கைச் சரியான கணக்கென்று காமராஜரும் கருதியிருந்தால், அவ ரைப் பதவியிலிருந்து விலக்க வேண்டுமென்ற முடிவுக்கு வந்தி ருக்க மாட்டார். ஆளும் திறமை ஆச்சாரியாருக்கு உண்டென்பதில் மற்றக் காங்கிரஸ்காரர்களைப் போல் காமராஜருக்கும் விட்டகுறை தொட்டகுறையின் காரணமாக நம் பிக்கை உண்டு.

ஆனால், ஆச்சாரியார் இனியும் ஆட்சியில் இருக்கக்கூடாது—இருக்க கக்கூடாதென்பதற்குக் காமராஜர் கூறும் காரணங்களில் ஒன்று, ஆச் சாரியார் ஜனநாயகத்தைக் கொலை செய்கிறார் என்பது. அதா வது அரசியல் சம்பந்தப்பட்ட எந் தக் காரியத்தைச் செய்தாலும், அவர், தன் விருப்பப்படி செய்கி றாரே தவிர, காங்கிரஸ் கட்சியின ரையோ, சட்ட சபை உறுப்பினர் களையோ கலந்தாலோசித்துச் செய் வதில்லை என்பது தான். இன் னொன்று, தமிழ்நாட்டுக் காங்கிரஸ் கட்சிக்குத் தலைவனாக இருந்தும், தம்மை ஒரு பொருட்டாக மதியா மலேயே எதனையும் செய்கிறார் என்பது மற்றொன்று. மந்திரிசபை யைப் படைக்கவும் அழிக்கவும் தனக்கு அதிகாரமும் ஆதரவும் இருக்கிறதென்பதைத் தம்முடைய சகாக்களுக்கும் எதிர்க்கட்சியினருக் கும் எடுத்துக் காட்டவேண்டுமென் பது.

வேறொன்று, தனிப்பட்ட முறை யில் காமராஜருக்கு ஆச்சாரியார் என்றாலே பிடிக்காது என்பது. இத் தியாதி காரணங்களே அடிப்படை யாகக் கொண்டே காமராஜர் ஆச் சாரியாரை அரசியலில் இருந்து விரட்ட முயற்சிக்கிறார்.

*

ஆச்சாரியார் ஆட்சியில் இருக்கக் கூடாதென்பதற்கு நாம் கூறும் கார ணம், அவர் ஜனநாயக முறைப்படி ஆட்சி நடத்துவதில்லை என்பதோடு, ஆட்சிபுரியும் திறன் ஆச்சாரியாருக்கு இல்லை என்று கூறி, அவருக்கிருக் கும் சிறிதளவு ஆட்சித் திறமையை



### வாழ்க! வாழ்க!!

"தம்பி, வில்லாளனிடம், பல நற் பண்புகளை, நான்,கண்டிருக்கிறேன். அந்தப் பண்புகள், அவரது, வாழ்க் கையைச் சிறப்பாக்கும் என்ற நம் பிக்கையும் உண்டு. வாழ்க்கையின வளைவு நெளிவுகளைப்பற்றி இது வரை 'ஏடுகளில்' தீட்டிக்கொண்டி ருந்த அவர் இன்று வாழ்க்கையில் அடிபெடுத்துவைக்கிறார் — மனித ருடைய வாழ்க்கையில் திருமணம், ஒரு குறிப்பிடத்தக்க அத்தியாய மாகும். தோழர் வில்லாளனை, மணக்கோலத்தில் காணப் பெரிதும் மகிழ்கிறேன். அவருக்கும் அவரது துணைவிக்கும் என்னுடைய மன மார்ந்த வாழ்த்துக்கள்" என்று 27—8—53 அன்று சிதம்பரத்தில் நடைபெற்ற, தி. மு. க. முன்னணி வீரர் — 'தம்பி' அச்சக உரிமை யாளர்—புதுமை எழுத்தாளர் தோழர் தில்லை-வில்லாளன் B. A. (Hons) தோழியர் தயாநிதியை வாழ்க்கைத் துணைவியாக ஏற்ற, விழாவில், பாராட்டுரை வழங்கிய தி. மு. க. பொதுச்செயலாளர் அண்ணா வாழ்த்தினர்கள்.

விழாவுக்கு தோழர் A. கோவிந்த சாமி M. L. A. தலைமை வகித்தார். உள்ளூர் வெளியூர்ப் பிரமுகர்களும் இயக்கத் தோழர்களும் ஏராளமாக வந்திருந்தனர்.

மணமக்களைப் பாராட்டி தோழர் கள் K. A. மதியழகன், இரா. இளம்வழுதி M. A. B. L., தமிழ்ச்சி ரியர் முருகேசனார், காஞ்சி C. V. ராசகோபால், இளமுருகு, எஸ். கருணானந்தம், அரங்கண்ணல், தோழியர் லாரென்ஸ் ஆகியோர் சொற்பொழிவாற்றினர்.

பல திராவிட முன்னேற்றக் கழ கக் கிளைகளின் சார்பில் வாழ்த் துரைகள் வாசித்தளிக்கப்பட்டன. தோழர்களும் நண்பர்களும் ஏராள மான புத்தகங்களும் வெள்ளிச் சாமான்களும் பரிசளித்தனர். ஏராளமான வாழ்த்துத் தந்திகளும் கடிதங்களும் வந்திருந்தன.

தோழர் தில்லை-வில்லாளன் அனை வருக்கும் நன்றி தெரிவித்துக் கொண்டார். அன்று மாலை திருவா ரூர் இசைமணி T. V. நமசிவாயம் இன்னிசை சிறப்பாக நடைபெற் றது.

புதுமணம் கண்ட தோழர் வில் லாளனுக்கு, நம்முடைய மகிழ்ச்சி கலந்த வாழ்த்துகள்!

யையும், அவர், தம்முடைய இனத்தவரின் நல்வாழ்வுக்காகவே செலவு செய்து, நம்மை எல்லாம் மீளமுடியாத படுகுழியில் வீழ்த்தப் பாடுபடுகிறார் என்ற குற்றச்சாட்டையும் அவர் மீதேற்றி, அவர், பதவியில் இருக்கக்கூடாதென்றுகூறுகிறோம்.

காங்கிரசில் இருக்கும் காமராஜர் குழுவினர் ஆச்சாரியாரின் ஆட்சியை எதிர்ப்பதற்கும், எதிர்க் கட்சிக் காரர்களாகிய நம்போன்றவர்கள் எதிர்ப்பதற்கும் பெருத்த அளவில் வேறுபாடுகள் உண்டு என்பதை விளக்கவே இதனை எழுதினோம்.

*

ஆச்சாரியார் ஆட்சியை ஒழித்துக் கட்டுவதில் முனைந்து வேலை செய்துவரும் காமராஜ் குழுவினர், ஆந்திரப் பிரிவினையை முதலாக (Capital) வைத்துப் பணியாற்றுகின்றனர் என்பதையும் நாம் அப்பொழுதிருந்தே கூறி வருகிறோம். "அக்டோபரில் ஆந்திரம் தனியாகிறது — சென்னை சட்ட சபையிலே காங்கிரஸ் உறுப்பினர்களின் எண்ணிக்கை இரவல் தேடவேண்டிய அவசியமற்ற அளவுக்கு இருக்கிறது. ஒட்டு, உறவு, உரசல், உபசாரம் இவைகள் தேவையில்லை. இந்த ஒட்டு உறவு வேலைக்குத்தானே ஆச்சாரியார் தேவைப்பட்டார். அக்டோபருக்குப் பிறகு அதுவும் தேவையில்லையே! இந்த நிலையில், ஆச்சாரியாரை அரசுக் கட்டிலிலே இனியும் இருக்கச் செய்யவேண்டுமா, என்று கேட்கிறார்கள் காமராஜர் கூட்டத்தினர்" என்று ஏற்கனவேயே கூறி இருக்கிறோம்.

இத்தகைய எதிர்ப்புச் சக்தியின் வளர்ச்சியால் ஏற்பட்ட எதிரொலி தான், காமராஜரின் மதுரைப் பேச்சும் அதைத் தொடர்ந்து நடைபெற்ற சம்பவங்களும்.

மதுரையில், ஆச்சாரியாருக்கு அறிவுரை வழங்கிய காமராஜர், சென்னைக்கு வந்ததும், அதிகார பூர்வமான ஆணை ஒன்றை ஆச்சாரியாருக்கு விடுத்தார். அதாவது, ஆச்சாரியார் இனியும் பதவியில் இருக்க வேண்டியதில்லை தலைமைப் பதவியை (Leadership) தலைமுழுகி விட வேண்டியது தான் என்ற விஷயத்தை உள்ளடக்கிய ஒரு கடிதத்தைத் தம்முடைய கட்சியின் பிரதம கொறடா மூலம் கொடுத்தனுப்பி விட்டு, ஆச்சாரியாரை நேரிலும் சந்தித்து மேற்படி தம்முடைய கருத்தை விளக்கி உறுதிப்படுத்தியிருக்கிறார்.

காமராஜரின் கடிதத்தை, அல்ல, அரசியல் சாவோலையைப் பார்த்ததும் பஜகோவிந்தர் பதைத்த, பதைப்பு இருக்கிறதே! பண்டித நேருவிடம் மண்டியிட்டாவது தம்முடைய தலைமையைத் தளராவிடாதபடி செய்து கொள்ள வேண்டுமென்ற அளவுக்கு அவரை ஒரு உலுக்கு உலுக்கியிருக்கிறது. உடனே அடித்தார் ஒரு தந்தி! "அலகாபாத்தாரே உம்முடைய அடி பணிகிறேன். என்னை எப்படியாவது இந்தச் சமயம் காப்பாற்றுங்கள். இன்னொரு தக்க சமயத்தை எதிர் பார்த்து நானுகவே — எவருடைய தலையீடுமின்றி — இந்தப் பொறுப்பிலிருந்து விலகிக் கொள்கிறேன்-பண்டிட்ஜீ! நீர் கூறும், நான் விலகிக் கொள்கிறேன்—ஆனல் இந்தக் காமராஜர்கள் மட்டும் என்னை விலக்கும்படி செய்துவிடாதீர்கள்" என்பதாக.

நிலைமையை உணர்ந்த நேரு அவர்கள், காங்கிரசின் மானம் இப்படி யெல்லாம் காற்றில் பறக்கப்படாதே என்று கருதியதாலோ என்னவோ, இந்தப் பிரச்னையைத் தற்காலிகமாக நிறுத்திவைக்கும்படி காமராஜருக்கு ஒரு தந்தி கொடுத்து விட்டு, அதன் நகலை ஆச்சாரியாருக்கும் அனுப்பி இருக்கிறார். அதோடு, இது சம்பந்தமாகக் கமிட்டிக் கூட்டத்தைக் கூட்ட வேண்டிய அவசியமில்லையென்றும் ஆச்சாரியாருக்கு அறிவித்திருக்கிறார். எனவே, ஆரம்பிக்கப்பட்ட அக்டோபர் 'ஸ்டண்ட்' பண்டித நேருவின் தலையீட்டின் பேரில் தற்காலிகமாக நிறுத்திவைக்கப்பட்டு, ஆச்சாரியாருக்கும் தற்காலிக சாந்தி ஏற்படுத்தப் பட்டிருக்கிறது. என்ற போதிலும், காமராஜருக்கு மட்டும் பண்டிதரின் தலையீடு பிடிக்கவில்லையென்றே தெரிகிறது.

ஆச்சாரியாரின் தரிசனத்துக்காகச் சென்று திரும்பிய காமராஜரை நிருபர்கள் பேட்டி கண்டு, சட்டசபைத் தலைமை விஷயமாக ஏதாவது பேச்சுவார்த்தைகள் நடத்தினீர்களா என்று கேட்டதற்கு, "ஆச்சாரியாரின் தலைமை விஷயமாக யார் தகராறு கிளப்பினார்களோ, அவர்களைப்போய்க் கேளுங்கள்" என்று கோபத்தோடு பதில் கூறிவிட்டுப் போய்விட்டாராம்!

எனவே, இப்போதைக்கு இது பற்றிய விளக்கம் இவ்வளவுதான் என்று கூறி, ஆச்சாரியாரின் தலைமைப்பிரச்னை தற்காலிகமாக நிறுத்திவைக்கப் பட்டிருப்பது போலவே, இக்கட்டுரையும், அது சம்பந்தமான பிரச்னைகள் மீண்டும் தலை தூக்கும்போது தொடர்ந்து எழுதப்படும் என்று கூறித் தற்காலிகமாக நிறுத்திக்கொள்கிறேன்.

## சேலம் மாவட்டக் குழு

20—9—53 ஞாயிற்றுக்கிழமை மாலை 2-மணிக்கு சேலம் மாவட்ட தி. மு. க. கூட்டம், செவ்வாய்ப் பேட்டை தி. மு. க. கட்டிடத்தில் நடைபெறும். மாவட்ட உறுப்பினர்கள் தவருமல் வரவேண்டுகிறேன். மாவட்டத்தில் ஜூலை 15 கிளர்ச்சிகளில் பங்கெடுத்துக் கொண்டு சிறை சென்ற தோழர்களுக்குப் பாராட்டு அளித்தல் பற்றி யோசிக்கப்படும்.

பி. இராமலிங்கம்,
துணைச் செயலாளர்.

## சென்னைக்கு "நம் நாடு" ஏஜண்டு

சென்னை நகரில் 1—9—53 முதல் "நம் நாடு" தினஇதழ் விற்பனை செய்ய நமது 'திராவிட நாடு' ஏஜண்டான தோழர் சி. எஸ். கண்ணையா அவர்கள் நியமிக்கப்பட்டிருக்கிறார். நகர தி. மு. கழகக் கிளைகளும், எல்லா வியாபாரிகளும் அவரிடம் 'நம் நாடு' இதழ் தினசரி பெற்றுக்கொள்ளலாம்.

பொறுப்பாளர்,
"திராவிட நாடு"

## ரங்கூனில் நமது ஏஜண்டு

ரங்கூனில், "திராவிட நாடு" விற்பனையாளரின் முகவரி கீழே தரப்படுகிறது. எல்லோரும் இந்த முகவரியில் "திராவிட நாடு" பெற்றுக் கொள்ளலாம்.

A. A. மஜீத்,
சவுத் இந்தியன் புக்டிபோ,
326, மோகல்வீதி, ரங்கூன்.



# பகைமைக்குக் காரணம் என்ன?

4-ம் பக்கத் தொடர்ச்சி

மாட்டார்களே! நம்முடைய வியாபாரம் நஷ்டமாகி விடுமே!" என்று பயமாகவும், பயமாகவும் வேண்டிக் கேட்டுக் கொள்ளும்போது மட்டும், "ஆமாம், உண்மைதான், தோட்டம் நம்முடையது தான் — மரமும் நம் நட்டதுதான் — பழங்களை எல்லோரும் சாப்பிடும்படி செய்ய வேண்டியவர்களும் நாம் தான்" என்று ஒப்புக் கொள்வதும் பின்னர், பழத்தைக் கையால் தொடப் போகும் போதே, அதன் அழகும் குணமும் கண்ணையும் கருத்தையும் ஒரே சமயத்தில் கலக்கச் செய்யும் போது, மீண்டும் அந்தப் பழங்களைப் பற்றிக் கண்டனக் குரல் கிளப்புவதும் சாதாரணமாக, நம் நாட்டு அரசியல் வானில் அவ்வப்போது காணப்படும் மின்னலாகவும், கேட்கப்படும் இடி முழக்கமாகவுமாகி விட்டது. எனவேதான் ஆச்சாரியாரைப் பற்றி, அதாவது, அவருடைய திறமையைப் பற்றி மரக்காதவர்கள் நினைக்கிறார்கள் என்று கூற வேண்டியிருக்கிறது.

மறந்ததை நினைப்பது மனித சுபாவமாயினும், இந்த விஷயத்தில் மட்டும் நண்பர் காமராஜ் குழுவினர் மறக்காமல் நினைக்கப் பழகிக் கொண்டுள்ளதைக் காணும் எவரும் ஆச்சரியப்படாமல் இருக்க மாட்டார்கள்.

*

9—6—53-ல் அருப்புக்கோட்டை மாநாட்டில் ஆச்சாரியாரை ஆலிங்கனம் பண்ணி, ஆட்சிப்பீடத்தில் அலங்கரிப்பதில் தங்களுக்குள்ள திறமை வேறுயாருக்கு உண்டென்று உபசாரமொழிகள் வழங்கிய காமராஜர் 31-8-53-ல் மதுரைக்கு வருகிற சந்தர்ப்பம் உண்டாக்கப்பட்டதும், அங்கும் ஆச்சாரியாரைச் சந்திக்கும் வாய்ப்பைப் பெற்றிருக்கிறார்.

இங்கே அவர் ஆச்சாரியாருக்கு வரவேற்பு உபசாரம் நடத்தவில்லை. வழியனுப்பு உபசாரம் நடத்தியிருக்கிறார்.

அருப்புக்கோட்டையில், நிர்வாக யந்திரத்தைச் சரியான முறையில் நடத்துவதற்கு ஆச்சாரியார் ஒருவரே தகுதியானவர் என்று கூறிய காமராஜர், எண்ணி எண்பது நாட்களுக்குள், மதுரையில் மணிபடிக்கிறார்—ரயில் புறப்படப் போகிறது, ஏறிக் கொள்ளும் என்று எச்சரிக்கைசெய்கிறார். இதுதான் கடைசி வண்டி, தவறினால் இங்கு தங்க நேரிடும். தாங்களோ வயதானவர், இப்போது இங்கு அடிக்கும் காற்றோ இளைஞர்களையே ஒரு உலுக்கு உலுக்கிவிடும் போல் இருக்கிறது. தங்களைப் போன்ற வயதானவர்களால் தாங்க முடியாது. எனவே, டிக்கெட்டை வாங்கிக்கொண்டு வண்டி ஏறிவிடுங்கள் என்று உபதேசம் செய்தார்—யோசனை கூறினர்.

31—8—53ல் மதுரையில் டி. வி. எஸ். அய்யங்கார் அவர்களின் கட்டிடத் திறப்பு விழாவில் கலந்து கொண்ட நண்பர் காமராஜர் அவர்கள், டி. வி. எஸ். அய்யங்கார் தம்முடைய தள்ளாத காலத்தில் தனயர்களிடம் பொறுப்பை ஒப்படைத்ததை ஆச்சாரியார் பாராட்டிப் பேசியதுப்பற்றிக் குறிப்பிடுகையில்,

"தந்தையின் அரிய குணநிசயங்களை இப்போது அவரது புதல்வர்கள் பேணி வளர்த்து, ஸ்தாபனத்தை நன்றாக நடத்தி வருவதாக எடுத்துக்காட்டப்பட்டிருக்கிறது. தந்தை விலகிக் கொண்டு, புதல்வர்களிடம் பொறுப்பை ஒப்படைத்திருக்கிறார். அரசியலுக்கும் இதுபொருந்தும். வயது முதிர்ந்த தலைவர்கள் இந்த உதாரணத்தைப் பின்பற்றி விலகிக்கொண்டு, இளைஞர்களுக்கு இடமளித்து, சரியாக அவர்களுக்கு வழிகாட்டினால், ராஜ்யத்தில் அரசியல் ஸ்தாபனங்கள் நேர்வழியில் சிரமமில்லாமல் வழி பிறக்கும்."

என்று பேசியுள்ளார். வயதானவர்கள் வாலிபர்களைத் தேடி அவர்களிடத்தில் தங்களுடைய பொறுப்புக்களை ஒப்படைப்பதென்பது, மற்ற எல்லாத் துறைகளுக்கும் ஏற்றது—பொருத்தமானதென்று கூறுவதை யாரும் மறுக்கமாட்டார்கள். சுந்தரமய்யங்கார், தான் சமைத்துக்கொண்டிருந்த பொறுப்பைத், தன்னுடைய பிள்ளைகளிடம் ஒப்படைத்தது போற்றத்தக்கதேயல்லாமல், வேறல்ல. அது, அவருடைய கடமையும் உரிமையுமாகும். அவர், தம்முடைய சொத்தைத்தன்பிள்ளைகளிடம் ஒப்படைத்தது, பத்திரிகைகளில் படம் போட்டுக் காட்டி விளம்பரப் படுத்தவேண்டிய தொன்றல்ல மோட்டார் தொழில் சம்பந்தமான நிர்வாகப் பொறுப்பையும், அவர், தம்முடைய புதல்வர்களிடம் ஒப்படைத்தார் என்றால், அவர்கள் அத்துறையில் நல்ல பயிற்சி பெற்றிருந்தார்கள்—எனவே பொறுப்பு அவர்களிடம் ஒப்படைக்கப்பட்டது. சுந்தரமய்யங்காரின் புதல்வர்கள் வக்கீல் வேலைக்கோ, டாக்டர் வேலைக்கோ போக முயற்சிக்காமல், தகப்பன் மேற்

# மறந்த ஒன்றை நினைவூட்டுவதா?

கொண்ட தொழிலைப் பழகி —மற்றத் துறைகளைவிட அதில் அதிக வருவாய் இருக்கிறதென்பதை அறிந்து — அந்தத் தொழிலையே அவர்களும் கற்றுக்கொண்டார்கள் என்று கூறினால், அது, அவர்களின்புத்திசாலித்தனத்தைப் பாராட்டுவதோடு முடியக்கூடிய ஒன்றே தவிர, பத்திரிகைகளில் விளம்பரப்படுத்தக்கூடிய அளவுக்கு அதில் ஒன்றுமில்லை.

சுந்தரமய்யங்கார், தம்முடைய தொழிலை ஒப்படைப்பதற்குத் தம்முடைய பிள்ளைகள் தகுதிபற்றவர்களாய் இருந்த காரணத்தால், அந்தத் தொழிலின் நிர்வாகப் பொறுப்பை, அந்தத் தொழிலில் நல்ல நிபுணத்துவம் படைத்த ஜி. டி. நாயுடுவிடமோ அல்லது அவர்போன்ற இன்னொரு மோட்டார் தொழில் வல்லுனரிடமோ ஒப்படைத்தார்—இதோ சுந்தரமய்யங்கார் — அதோ புதிய நிர்வாகப் பொறுப்பேற்றவர் என்று பத்திரிகைகளில் படம் போட்டுக் காட்டினுல், அது, யாவராலும் வரவேற்கக்கூடிய ஒன்றாகும்.

சுந்தரமய்யங்காரின் புதல்வர்கள் அத்தொழிலில் பயிற்சியற்றவர்களாய் இருந்தார்கள் என்று வைத்துக் கொள்வோம். அப்பொழுது, யார் அந்தப் பொறுப்பை ஏற்றுக் கொள்வார்கள் என்று நினைக்கிறீர்கள்? ஒரு கிருஷ்ணமாச்சாரியோ பா கோபாலாச்சாரியோ தான் — அந்தத் தொழில் தெரியாவிட்டாலும்— அந்தப் பொறுப்பில் இருப்பார்கள் —இருத்தப் படுவார்களே தவிர, நிலைமை வேறு விதமாக ஒரு போதும் இராது — மாறாது. இது கிடக்கட்டும், அற்ப விஷயம்! அரசியல் பேசவந்தவன் சமுதாயப் பேச்சில் இறங்கி விட்டானே என்று கூடச் சிலர் என் மீது கோபிக்கக் கூடும். ஆனால், ஒன்று மட்டும் கூறி விடுகிறேன். நான் மட்டுமல்ல— இன்றைய அரசியல் உலகில் அதிமேதை—திறமை மிக்கவர் என்று ஒரு சிலரால் கருதப்பட்டாலும், பலரால் கருதப்படுவதாகப் பறைசாற்றப்படும் ஆச்சாரியாரே ஒன்றைப் பேசவந்து இன்னொன்றைப் பேசுகிறார் என்றால், என்போன்ற சாதாரணமானவர்கள் எம்மாத்திரம்?

சுந்தரமய்யங்கார் அவர்களின் தொழில் முன்னேற்றத்தைப் பாராட்டிப் பேசவந்த ஆச்சாரியார் "பிராம்மண—சூத்ர" சம்வாதத்திலும் இறங்கினர் என்று கேள்விப்படுகிறோம். ஒரு தொழிலையும், அதனைச் செய்பவரையும் பாராட்ட வந்த பஜகோவிந்தர், மறந்து போன ஒன்றை நினைவூட்டும் நெஞ்சழுத்தத்தை ஏன் — எப்படிப் பெற்றார்? மோட்டார் தொழிலுக்கும் பிராம்மண—சூத்ர சம்வாதத்துக்கும் என்ன சம்பந்தம்? மோட்டார்த் தொழிலைப் பிராம்மணன் செய்யக் கூடாது—சூத்ரன் தான் செய்ய வேண்டுமென்ற ஏற்பாடு ஏதாவது இருக்கிறதா? மனு கூறுவதை இந்த மறையவர் ஏன் கூறுகிறார்? சகலகலா வல்லவரான மனுவாலே கூட இந்த மோட்டார்த்தொழிலைக் கண்டுபிடிக்க முடியவில்லையே! யார் வேண்டுமானாலும் எந்தத் தொழிலை வேண்டுமானாலும் செய்யலாம் என்ற சிறந்த பண்பைப் பெற்ற மேல் நாட்டவனன்றோ இந்தத் தொழிலைக் கண்டு பிடித்தான். இப்படிப்பட்ட ஒரு தொழிலைப் பற்றிப் பேசும் போது ஏன் "பிராம்மண மமதேவதா" என்று பஜனை பாட வேண்டும்?

"நம்மனவாளுக்குச்சொல்லவேண்டியதெல்லாம் சொல்லிவிட்டேன்— கடைசியாக இதனையும் சொல்லி விடுகிறேன்—அதாவது, நீங்கள் பிராமணர்கள், உங்களைச் சூழ இருப்பவர்களோ சூத்திரர்கள் — மறந்துவிடாதீர்கள்—நான் ஒரு அரசியல் தலைவனாக இருந்தும், என் வாயில்வரக்கூடாத — வரவேண்டிய அவசியமில்லாத ஒரு சொல்லை உச்சரிக்கிறேன் — அதிலும் அந்தச் சொல் மறக்கப்பட்டுப்போன இந்த நிலையிலும் அதனை உச்சரிக்கிறேன் என்றால், அது, நம்மனவாளின் நன்மையை உத்தேசித்தே என்பதனை என் இனத்தவராகிய நீங்கள் கவனத்தில் வைத்துக்கொள்ள வேண்டும்" என்பதைத் தவிர, அந்தச் சொல், அந்த இடத்தில் உச்சரிக்கப்பட்டதற்கு வேறு காரணம் எதுவும் இருக்கமுடியாது.

*

ஒருவர், தம்முடைய பொறுப்பை மற்றவர்களிடம் ஒப்படைப்பது, மற்றத் துறைகளுக்குப் பொருந்தினாலும், அரசியல் துறைக்கு, அது, அவ்வளவாகப் பொருந்தாதே என்பது என்னுடைய கருத்து. அரசியல் பொறுப்பு, அறிவும், திறமையும் படைத்தவர்களிடம் ஒப்படைக்கப் படவேண்டிய ஒன்றேயன்றி, சந்





# என்னையே நம்பி இருக்கக்கூடாது

தரமய்யங்கார் தம்முடைய பொறுப்புகளைத் தம் பிள்ளைகளிடம் ஒப்படைத்ததுபோல், வாரிசுகளிடமோ வருங்கால இளைஞர்களிடமோ ஒப்படைக்கக் கூடியதல்ல என்பது அரசியல் உலகில் அனுபவமுள்ள அனைவராலும் ஒப்புக்கொள்ளக் கூடிய ஒன்றாகும். அதிலும், அரசியல் பொறுப்பு, குறிப்பிட்ட இன்னாரிடம் தான் இருக்கவேண்டுமென்பதில்லை. இளைஞர்கள், முதியவர்கள் யார் வேண்டுமானாலும் அந்தப் பொறுப்பை ஏற்கலாம். ஆனால், அவர்கள், நாட்டுமக்களின் பாராட்டுதலுக்கும், நல்ல காரியங்களையே செய்யவேண்டு மென்பதில் நாட்டம் கொண்டவர்கள் என்ற நம்பிக்கைக்கும் உரித்தானவர்கள் யாராயிருந்தாலும் அவர்கள் தான் அரசியல் பொறுப்பேற்பதற்கு அருகதையுடையவர்கள் என்று கூறுகிறேன். எனவே, நண்பர் காமராஜர் அவர்கள், சுந்தரமய்யங்காரின் உதாரணத்தை அரசியலுக்குப் பொருத்திப் பேசியதை நம்மால் வரவேற்க முடியவில்லை.

*

தம்முடைய அரசியல் வாழ்வுக்கு விடுதலை அளிக்கவந்த விருதுநகராரைப் பார்த்து, ஆச்சாரியார் ஒரு வேண்டுகோளை — எச்சரிக்கை கலந்து விடுத்துள்ளார்.

"நீங்கள் என்னையே எப்போதும் நம்பி இருக்கக்கூடாது. பொறுப்பை ஏற்க ஆவல் கொண்டு, என்னிலும் இளையவர்கள் இருக்கிறார்கள் என்பது எனக்குத் தெரியும். அது நியாயமான ஆசையே. நல்லவர்கள் முன்வந்தால் நான் குறுக்கே நிற்கமாட்டேன். அவர்கள் பொறுப்பேற்பதை நான் வரவேற்கவே செய்வேன். ஆனால், அவர்களை ஏற்றுக்கொள்ள வேண்டியது மக்கள்தான்"

என்று பேசியுள்ளார். ஆட்சிப் பொறுப்பை ஏற்க ஆவலோடு காத்துக்கிடக்கும் இளைஞர்கள் இருப்பது ஆச்சாரியாருக்குத் தெரியுமாம்! அந்த இளைஞர்களின் ஆசையையும் அவர் பாராட்டுகிறாராம்! எனவே, நல்லவர்கள் நாட்டை ஆள முன்வந்தால் தாம் குறுக்கே நிற்கமாட்டாராம்! அப்படிப்பட்டவர்கள் பொறுப்பேற்பதைத் தாம் வரவேற்பதாகவேறு கூறுகிறார். ஆனால், அந்த நல்லவர்களை நாடு வரவேற்கவேண்டுமாம்!

நல்லவர்கள் — நாட்டை ஆள்வதற்கு ஏற்ற தகுதியும் திறமையும் ஒழுக்கமும் உள்ள நல்லவர்கள். இது தானே, அந்த நல்லவர்கள் என்பதற்குப் பொருள். இப்படிப்பட்ட நல்லவர்களை நாடு ஏற்றுக் கொள்ளாதென்ற சந்தேகம் ஆச்சாரியாருக்கு ஏன் ஏற்பட்டது என்பதை நம்மால் புரிந்து கொள்ளவே முடியவில்லை.

"நல்லவர்களை ஏற்றுக் கொள்ள வேண்டியது மக்கள் தான்"

என்ற எச்சரிக்கையை ஆச்சாரியார் ஏன் செய்கிறார்? நல்லவர்கள் ஆட்சிக்கு வந்தால், நாடு, அவர்களை நல்ல முறையில் வரவேற்கும் என்பது ஆச்சாரியாருக்குத் தெரியாத ஒன்றா? தெரிந்த ஒன்றை—நல்லது என்று தெரிந்த ஒன்றை ஏன் எதிர்க்கிறார்—எச்சரிக்கிறார். நல்லவர்கள் நாட்டில் நடமாடக் கூடாதென்பதுதானே ஆச்சாரியாரின் இந்த எச்சரிக்கைக்குக் காரணம். இல்லையென்றால், "நல்லவர்களை ஏற்றுக்கொள்ள வேண்டியது மக்கள்தான்" என்று ஏன் கூற வேண்டும்.

நல்லவர்களை மக்கள் அவசியம் ஏற்றுக் கொள்வார்கள்

என்று கூற வேண்டியவர், ஏற்றுக் கொள்ள வேண்டியவர்கள் மக்கள் தான் என்று, தம்முடைய ஆட்சிக் காலத்தை நீட்டிக் கொண்டு போக முயற்சிப்பது போல் ஏன் இதையும் நீட்டிப் பேசவேண்டும்.

"மக்கள்தான்"

இதில் இருக்கும் நீளம்—ஆழம்— எவ்வளவு? அளந்து பார்க்க முடியுமா? ஆச்சாரியார் இவ்விதம் பேசுவதற்குக் காரணம் என்ன? இந்த நாட்டிலே தன்னைத் தவிர நல்லவர்கள். வேறு யாரும் இல்லை என்பது தானே இந்த நீட்டலின் பொருள்!

இந்த இலட்சணத்தில், அவர் தன்னைப்பற்றி மிகவும் தாழ்த்திப் பேசுவதாகக் கருதிக்கொண்டு,

"என்னையே எப்போதும் நம்பி இருக்கக்கூடாது"

என்று வேறு வெட்கமின்றிப் பேசுகிறார். அவரை யாரோ நம்பி இருப்பதாகவும், அவர் இல்லையென்றால் நாடே குட்டிச்சுவராகிவிடும் போலவும் பேசுகிறார். சேலம் ஸ்ரீ சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார் அவர்கள் இல்லையென்றால், சென்னை மாகாணமே சின்னாபின்னமாகி விடுமென்று எந்த ஜோசியனாவது 'ஆருடம்' கூறினனா? "என்னையே எப்போதும் நம்பி இருக்கக் கூடாது" என்று ஆச்சாரியார் பேசியதன் பொருள் என்ன? அவரைத் தவிர, இந்த நாட்டை ஆள வேறு யாரும் கிடையாது என்பதைத் தவிர, இதற்கு வேறு என்ன பொருள் கூறமுடியும்? ஏன், நாம் இப்படிக் கூறுகிறோமென்றால், ஆச்சாரியார் ஒருவரால்தான் இந்நாட்டில், எந்தவிதமான பிளவும் ஏற்படாமல் பார்த்துக்கொள்ளவும் காங்கிரசின் பலம் குறையாதபடி பார்த்துக்கொள்ளவும் முடியுமாம். இந்த உண்மையை அவரே வெளிப்படையாகவே கூறிவிட்டார்.

"பிரிவினைக்குப் பிறகு தமிழ் நாட்டில் நமக்குள் பிளவு ஏற்படாதபடியும், நமது பலம் குறையாதபடியும் பார்த்துக்கொள்ள வேண்டும்"

என்றுபேசியுள்ளார். அவரால்தான் பிளவையும் பலகுறைவையும்சரிக்கட்ட முடியுமென்று நினைப்பதாலேயே, அவர், அவை ஏற்படாமல் பார்த்துக்கொள்ள வேண்டுமென்று, ஆட்சிப் பொறுப்பை ஏற்க ஏங்கிக் கிடக்கும் இளைஞர்களுக்கு இதோபதேசம் செய்கிறார்.

## தம்பி

3—9—53-ல் தோழர் தில்லைவில்லாளன் பி. ஏ. (ஆனர்ஸ்), கடலூர் அடிஷனல் மாஜிஸ்ட்ரேட் முன்னிலையில், தம்மை, 'தம்பி' என்ற தமிழ் வார வெளியீட்டின் அச்சிடுபவர், வெளியிடுபவர், ஆசிரியராகப் பதிவு செய்துகொண்டார்.

# அந்தப் பொல்லாத கரகோஷம்!

ஆச்சாரியார் தம்முடைய பதவி பறிபோகாமல் இருப்பதற்கு என்னென்ன முறைகளைக் கையாள முடியுமோ அவற்றையெல்லாம் செய்து பார்க்கிறார். தம்முடைய முயற்சி போதாதென்று, வேறு பலரையும் அதில் ஈடுபடும்படி செய்கிறார்.

"ராஜ்ய பிரிவினைக்குப் பிறகும் ராஜாஜியே முதன் மந்திரியாக இருந்து வழிகாட்டவேண்டும்."

இது, மதிப்பிற்குரிய நிதி மந்திரி சுப்பிரமணியம் அவர்கள் பேசியது. எங்கே—எப்போது இவ்விதம்பேசினார் தெரியுமா?

காமராஜர், ஆச்சாரியாருக்கு வழியனுப்புபசாரம் எங்கே நடத்தினாரோ, அங்கேதான்—அதே தேதியில்தான்—அதே கூட்டத்தில்தான்—நல்லவர்கள் முன்வந்தால் நாட்டை அவர்களிடம் ஒப்படைக்கத் தயார் என்று ஆச்சாரியார் கூறியதைக் கேட்டுக்கொண்டிருந்த அதே நேரத்தில் தான் இந்த வேண்டுகோளும் விடப்பட்டிருக்கிறது. காமராஜர் கசையடி கொடுக்கிறார்—சுப்ரமணியம் "சுவாமிகளே தஞ்சம்" என்கிறார். ஒரு தாய் வயிற்றுப்பிள்ளைகள்தான் அந்த இருவரும், என்ற போதிலும், ஒருவர் அணைக்கிறார்—மற்றவர் அடிக்கிறார். தந்தையோ சங்கடமான நிலையில் அகப்பட்டுக்கொண்டு "என்னைக் காப்பாற்றுங்கள் எப்படியாவது" என்று கெஞ்சுகிறார்.

தோழர் சுப்ரமணியம் அவர்கள் ஆச்சாரியாரை அணைத்துப் பேசியபோது அங்கு குழுமியிருந்த மக்கள் கைதட்டித் தங்கள் பதிலைத் தெரிவித்ததாக ஒரு செய்தி பத்திரிகைகளில் வெளிவந்திருக்கிறது. அதாவது, நிதி மந்திரி, ஆச்சாரியாரே முதல் மந்திரியாக இருக்க வேண்டுமென்று பேசினவுடனே, அங்கிருந்தவர்கள்,

"பிரமாதமாகக் கரகோஷம் செய்தனர்"

என்று பத்திரிகைகளில் காணப்படுகிறது. மேற்படி கரகோஷத்தை எழுப்பியவர்கள் எந்தக் குழுவினர் என்பதற்கு அந்தப் பத்திரிகைகள் விளக்கம் தரவில்லை. சென்னை மாகாண முதலமைச்சர் ஆச்சாரியாரை ஆதரிப்பவர்களும், தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டித் தலைவர் காமராஜரை ஆதரிப்பவர்களும் அங்கு குழுமி இருந்திருக்கிறார்கள். எனவே, கரகோஷம் எந்த திசையில் இருந்து எழும்பிற்று என்பதைத் தெரிந்தால்தானே அந்தக் கரகோஷத்தின் பலாபலன்களைக் கூறமுடியும்!

ஒருவரை வரவேற்பதும் கரகோஷம்தான்—வெளியே அனுப்புவதும் கரகோஷம்தான். அரசியல் மேடைகளில் இது சர்வசாதாரணமாகக் கையாளப்படும் முறை. மேடையில் பேசிக்கொண்டிருப்பவரை, மேலும் பேசவிடாமல் தடுக்கவேண்டுமா? கைதட்டினால் போதும், மனுஷன் வேறு வழியின்றி உட்கார்ந்துவிடுவார். பேசிக்கொண்டிருப்பவரை உற்சாகப்படுத்தி, மேலும் பேசச்செய்ய வேண்டுமா? அதற்கும் கைதட்டினால் போதும். இந்தப் பொல்லாத கரகோஷம் இருக்கிறதே! நல்லது கெட்டது இரண்டுக்குமே நான், நான் என்று முந்திக்கொள்கிறது.

எனவேதான், தோழர் சுப்பிரமணியம் அவர்கள் ஆச்சாரியாரை ஆதரித்துப் பேசியதைக் கேட்டதும் உண்டான கரகோஷம், எதைக் குறிக்கிறதென்று சிந்திக்கவேண்டியிருக்கிறது. கரகோஷம் யாருக்காக எழுப்பப்பட்டதென்பதைப் பற்றிய கவலை நமக்கில்லையென்றபோதிலும், அது, ஆச்சாரியாருக்காகத்தான் என்று எண்ணக் கூடிய வகையில் பத்திரிகைகள், அதற்குத் தனி மதிப்புக் கொடுத்து வெளியிட்டிருப்பதாலேயே அதுபற்றிய குறிப்பொன்றும் எழுத வேண்டியதாயிற்று.

*

ஆச்சாரியாரின் ஆயுள் முதிர்ச்சியைக் காரணம் காட்டிக், காமராஜர், அவரை ஆட்சிப்பீடத்திலிருந்து அகலும்படி அறிவுறுத்துகிறார் என்பது, உண்மையில், ஆச்சாரியார் தம்முடைய தள்ளாத காலத்திலும், மக்களின் நலனைக் கருதியே பதவியில் இருக்கிறார் என்ற பச்சாதாபத்தால் தான் என்று கருதிவிட வேண்டாம். "ஆத்மார்த்த வழிகளில் ஈடுபாடு கொண்ட அவரது மனம் அரசியலுக்குச் சுலபத்தில் திரும்பவில்லை.

(11-ம் பக்கம் பார்க்க)



Edited, Printed & Published by C. N. Annadurai M.A., at "Dravidanadu" Press, 95, Tirukkachinambi St., Kancheepuram.

